*Manram*

*Malar 5, ital 22*

*March 15, 1957*

Record no. 1039

# மன்றம்

லர் 5 | 15-3-57 | இதழ் 22


## நாடே! நீ வாழ்க!

(அருணன்)



வாழ்க திருநாடே வாழ்க திருநாடே
வாழ்வின் புதுமை நாளும் நிறைந்தே (வாழ்க)

மேழிச் செல்வமும் மேலான அறிவும்
மேவாது வழங்கும் தாயான நாடே (வாழ்க)

ய்மையென்னும் உயிர்மைச் சொல்லின்
தனிப்பொருள் நீயே
னியாளும் தகைமைதந்த திரவிடத்தாயே
யுன் இளமைத் தரங்களெல்லாம் தளர்ந்திருந்தாயே
ழ்விலாத உனதுமாட்சி மீண்டும் நிலவவே (வாழ்க)

உதயசூரியன் வரவால் உயிர்கள் யாவுமே
உளமகிழ்ந்து உவந்துகூடி யாடுதல்போலே
உனதுபொலிவு கண்டுமாந்தர் உளங்கொண்டாடவே
உண்டுஇன்பம் உண்டுஎன்று மகிழ்வுகொள்ளவே
(வாழ்க)


உள்நாடு அணா 4 ★ மாதமிருமுறை ★ வெளிநாடு அணா 5

## அண்ணுதுரை பாதை!

காஞ்சிபுரம் தொகுதியைச் சேர்ந்த பல கிராமங்களுக்கும் அண்ணு அவர்கள் வாக்காளர்களைச் சந்திப்பதற்காகச் சென்று வந்து கொண்டிருந்தார்கள். அப்படியே ஒரு கிராமத்திற்கு அறிஞர் அண்ணுவும் வேறு சில நண்பர்களும் சென்ருர்கள். அந்த ஊர் மக்களும் அண்ணு அவர்களை மற்ற பகுதி மக்கள் வரவேற்றதைப் போலவே மிகுந்த உற்சாகத்தோடும் மகிழ்ச்சியோடும் வரவேற்ருர்கள். அண்ணு அங்குக் கூடியிருந்தவர்களைப் பார்த்து "உங்கள் ஊர்ப்பாதை புதிதாக இருக்கிறதே எப்பொழுது போடப்பட்டது" என்று கேட்டார்கள். மிகச் சமீப காலத்தில் தான் போடப்பட்டது என்றும், அதுவும் தேர்தலுக்காகவே போடப்பட்டது என்றும் தெரிவித்தார்கள். அந்தக் கூட்டத்திலே இருந்த ஒருவர் இந்தப் பாதைக்கு நாங்கள் "அண்ணுத்துரை பாதை" என்று பெயர் வைத்திருக்கிருேம் என்ருர். ஏன்? என்று புன்முறுவலோடு கேட்டார்கள். அதற்கு அவர் கூறினர் "நீங்கள் இந்தத் தொகுதியில் தேர்தலுக்கு நிற்கிற காரணத்தால்தான் இவ்வளவு அவசர அசரமாக காங்கிரஸ் சர்க்கார் இந்த ஊர் பாதையைப் போட்டிருக்கிருர்கள். ஆக இது உங்களால் எங்களுக்குக் கிடைத்ததுதானே, எனவே 'அண்ணுதுரை பாதை' என்ற பெயர் இதற்கு பொருத்தம்தானே" என்ருர். சூழ்ந்து நின்றவர்கள் அனைவரும் அதனை சிரிப்புடன் ஆமோதித்தனர்.




மலர் 5 ☆ (15—3—57) ☆ இதழ் 22

## தேர்தலில் நாம்!

திராவிட முன்னேற்றக்கழகம் தேர்தலில் ஈடுபடுவது என்பது தமிழகத்தின் அரசியலில் நிச்சயமானதொரு திருப்பு மையமாக அமையும் என்பது நாம் எதிர்பார்த்ததைப் போலவே நிகழ்ந்திருக்கிறது. தேர்தல் என்ருல் ஏதோ ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறுகிற ஒரு அரசியல் சடங்கு என்கிற நிலைமைமாறி, மிகுந்த அக்கரையோடும் பொறுப்புணர்ச்சியோடும் காரிய மாற்றவேண்டும் என்கிற விழிப்புணர்ச்சி இன்று நாட்டு மக்களிடையே மலர்ந்திருக்கிறது. இந்த எண்ண மலர்ச்சிக்கும் விழிப்புணர்ச்சிக்கும் திராவிட முன்னேற்றக்கழகம், மாற்ருரும் மறுக்க முடியாத அளவுக்கு காரணமாக இருந்திருக்கிறது. இதனை தமிழகத்துக்கு வெளியே இருக்கும் பொறுப்புள்ள பத்திரிகைகளும், கட்சிகளும் ஒப்புக்கொண்டுள்ளன. மக்களிடையே கடந்த எட்டாண்டுகாலமாக நாம் ஊட்டிவந்த பகுத்தறிவு உணர்ச்சியும் நாட்டுப் பற்றும் நல்ல பலன் தந்திருக்கிறது என்பதையும் நாம் கண்கூடாகக் காணமுடிகிறது. திராவிட முன்னேற்றக்கழகத்தைக் கண்டாலே தீப்பட்டதைப் போல் துடிக்கின்றவர்களைப் பார்க்கிற அதே நேரத்தில், தமிழகத்திற்கு மிகத் தேவையான கட்சியினர் நாம்தான் என்று பெருவாரியான மக்கள் நம்மை மகிழ்ச்சிப் பெருக்கோடு வரவேற்கும் காட்சி உழைப்போருக்கு உற்சாகம் தரத்தக்க விதத்தில் அமைந்திருக்கிறது.

தமிழகத்தைப் பொறுத்த மட்டில் இத்தகைய விழிப்புணர்ச்சி வெளிப்படையான பல ளிக்காமற் போனுலும், கூர்ந்து நோக்குவோரும், கூறிய மதிபடைத்தோரும் ஒரு உண்மையை நிச்சயம் புரிந்துகொள்வார்கள். இதுவரை வெளிவந்துள்ள தேர்தல் முடிவுகளைப் பார்க்கிற நேரத்தில் வெளிப்படையாக காங்கிரஸ் வெற்றிபெற்று எண்ணிக்கையில் தொகைமிகுந்து இருப்பதாகக் காட்சியளித்தாலும், திராவிட முன்னேற்றக் கழகத்தின் செல்வாக்குக் குறைத்து மதிப்பிடக்கூடியதாகவோ, புறக்கணிக்கக் கூடியதாகவோ இல்லை என்பதை நம்மைவிட மாற்ருர், குறிப்பாகக் காங்கிரஸ் கட்சியினர் நன்ருக உணர்ந்துகொண்டார்கள்.

தமிழகத்தில் காங்கிரஸ்கட்சிக்கு அடுத்தபடியாக இருப்பது திராவிட முன்னேற்றக் கழகம் தான் என்று நாம் சொல்லி வந்ததை ஏதோ பெருமைக்குரிய விளம்பரமாக நாம எடுத்தியம்பி வருவதாகவே பலரும் நினைத்தார்கள். ஆனுல் இன்றுவரை வந்திருக்கிற தேர்தல் முடிவுகள் நாம் சொல்லிவந்த உண்மையை மேலும் பலப்படுத்துவதாகவே அமைந்திருக்கிறது. தமிழகத்தில் பல தொகுதிகளில் காங்கிரஸ் கட்சிக்கு அடுத்தபடியாக நமது கழக அபேட்சகர்கள் பெருவாரியான வாக்குகளைப் பெற்றிருக்கிருர்கள். காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்றுள்ள பல இடங்களிலும் நம்முடைய தோழர்களைவிட சில ஆயிரம் வாக்குகள்தான் அதிகம் பெற முடிந்திருக்கிறது. என்பதையும் யாரும் மறுக்கமுடியாது. வெற்றி பெற்றிருக்கிற நம்முடைய தோழர்கள் காங்கிரஸ்காரர்களை முறியடித்திருக்கிற இடங்களிலும் பெருவாரியான வாக்குகள் வித்தியாசத்தில்தான் வெற்றிபெற்றிருக்கிருர்கள். தமிழகத்தின்தேர்தலிலேயே குறிப்பிடக்கூடிய விதமான பெருவாரியாக வாக்குகள் பெற்று வெற்றி பெறும் வாய்ப்பையும் நமது தோழர்கள் சிலர் பெற்றிருக்கிருர்கள் என்பதை நாம் பெருமையோடு கூறிக்கொள்ள முடியும்.

காங்கிரஸ், இன்று தமிழ் நாட்டில் பெற்றிருக்கிற வெற்றியை வைத்துக்கொண்டு, மக்களிடையே காங்கிரஸ் கட்சிக்குத்தான் செல்வாக்கு இருக்கிறது என்று வாதாடுவது உண்மையை நிச்சயம் புறக்கணிப்பதாகத்தான் இருக்கும். ஒரு சில இடங்களைத்தவிர காங்கிரசுக்கு எதிர்ப்பு என்ற வகையில் ஒருமித்த எதிர்ப்பு ஏற்படுவதற்கான வாய்ப்பில்லாமல் போனகாரணத்தினுல்தான் காங்கிரஸ் வெற்றி சுலபமாயிற்று என்பதை எவரும் மறுக்க முடியாது. காங்கிரஸ் வெற்றியை வைத்து மக்களிடத்தில் காங்கிரசுக்குப் பிடிப்பு இருக்கிறது என்று வாதிடுவதானுல், காங்கிரசுக்கு கிடைத்திருக்கிற வாக்குகளையும், காங்கிரசல்லாத மற்ற கட்சிகளின் வாக்குகளையும் பார்க்கிற நேரத்தில், காங்கிரசல்லாத கட்சிகளின் வாக்குகள் பெருவாரியாக இருக்கின்றன. காங்கிரசை ஆதரித்துப் போடப்பட்ட வாக்குகளை

விட எதிர்த்துப் போடப்பட்ட வாக்குகள் அதிகம் என்பது தேர்தல் முடிவுகளிலிருந்து நாம் காணக்கிடைக்கும் ஒன்ருகும். தேர்தலில் பெறுகிற வெற்றிதான் செல்வாக்கை நிர்ணயிப்பது என்ருல்-தேர்தல் நாணயமாக நடத்தப்படும் ஒன்ருக இருந்தால் நாமும் இதையே அளவுகோலாக ஏற்றுக்கொள்ளலாம். ஆனல் இன்றைய தேர்தலில் காங்கிரஸ் பெறுகிற வெற்றிக்கான காரணங்கள் அனைவரும் அறிந்தவை. காங்கிரஸ்கட்சி ஆட்களை தேர்ந்தெடுக்கிற நேரத்திலேயே பெருவாரியாக செலவழிக்கக்கூடிய பெரும் பணக்காரர்களையும், மிட்டா மிராசுகளையும், ஆலை அதிபர்களையுமாகப் பார்த்து தேர்ந்தெடுத்திருக்கிறது.

வாக்குகளைப் பணம் கொடுத்து வாங்கவும், வேறு பல இழி முறைகளைக்கையாளவும் காங்கிரஸ் கொஞ்சமும் தயங்கவில்லை என்பதை பொதுமக்கள் அனைவரும் நன்கறிவர். மேலும், கொள்கை கோட்பாடுகளைப்பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாமல், தேர்தலில் வெற்றி பெறுவதையே குறிக்கோளாகக் கொண்டு களத்தில் இறங்கியிருக்கிற காங்கிரசுக்கும்; தோற்ருலும் பரவாயில்லை. இலட்சியத்தினின்று வழுவிடவும், கொள்கையினை விட்டுக்கொடுத்திடவும் கூடாது என்று கொள்கை அடிப்படையிலே நின்று போட்டியிடுகிற திராவிடமுன்னேற்றக் கழகத்திற்கும் ஏற்படுகிற வெற்றி தோல்விகள் ஒருமித்தவையாக நிச்சயம் இராது என்பதையும் நாம் உணர வேண்டும். கொள்கை அடிப்படையில் நின்று போராடுகிறநமக்கு, தேவைகள் ஏராளமாகவும், எதிர்ப்புகள் அதைவிட அதிகமாகவும் இருக்கிற காரணத்தால், எதிர்ப்புச்சக்திகள் பிறபோக்குத்தன்மை வாய்ந்தனவாக இருந்தாலும், வேறுபல வசதிகளைக் கொண்டு எப்படியோ வெற்றி பெற முடிகிறது.

இவ்வுண்மையை உணருகிறவர்கள் யாரும், கொள்கைகள் தோற்றுவிட்டதாகவோ, உண்மைகள் அழிந்துவிட்டதாகவோ கருதமாட்டார்கள். காஞ்சிபுரத்தில் இருந்த எதிர்ப்புக்கு, சதி திட்டங்களுக்குச், சூழ்ச்சிகளுக்கும் இடையே அறிஞர் அண்ணு அவர்கள் பெற்றிருக்கிற வெற்றி, மாற்ருரும் கண்டு பாடம் பெறவேண்டிய ஒரு மகத்தான நிகழ்ச்சியாகும். அறிஞர் அண்ணு அவர்களின் வெற்றி பெருமைப்படத்தக்கதுதான். பெருமிதமானவெற்றி என்பது மட்டுமல்லாமல், நாட்டுமக்களிடத்தில் நயவஞ்சகமாகப் பேசி எதையும் சாதித்துவிடமுடியும் என்று நினைப்போருக்கு நல்ல அடியாகவும் அது அமைந்திருக்கிறது. "இங்கேவிழுகிற அடி- இவர்களுடைய கொள்கைகளுக்கே சமாதிகட்டும்" என்று காமராசர் காஞ்சிபுரத்திலே பேசினர்; அந்தப் பேச்சுக்குப் பிறகுதான், அண்ணு அவர்கள் பெருவாரியானவாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதனல் திராவிடமுன்னேற்றக் கழகத்தின் கொள்கை கோட்பாடுகளை மக்கள் பெருவாரியாக ஏற்றுக்கொண்டார்கள் என்பதைத் தானே இது காட்டுகிறது என்று நாம் கேட்க விரும்புகிறேம்.

தேர்தலில் திராவிடமுன்னேற்றக் கழகத்தினை தோற்கடித்துவிடவேண்டுமெனத் திட்டமிட்டவர்கள் யாராகஇருந்தாலும் அவர்கள் நிச்சயம் தோற்றுப்போயிருக்கிருர்கள். என்று நாம் கூறமுடியும். தேர்தலில் தி. மு. க. அபேட்சகர் வெற்றி பெறுமற்போன பகுதிகளிலும், கழகம் தனது செல்வாக்கைத் தேர்தலின் காரணமாக இழந்து விடவில்லையென்பதை அந்தந்தப்பகுதி மக்கள் நன்கறிவார்கள். நாட்டில் இது வரை சொல்லிவந்த கொள்கைகள் மேலும் வலிவு படவும் விரிவடையும் சட்டசபையும் பயன் படவேண்டும் என்ற நோக்கத்தோடு தான் நாம் தேர்தலில் ஈடுபட்டோம்; தேர்தல் நேரத்தில், வேகமாகவும், விரிவான அளவிலும் நமது கொள்கைகளை நாம் பிரச்சாரம் செய்திருக்கிறேம். தேர்தல் நேரத்தில் தமிழகத்தின பல் வேறு பகுதிகளிலும், பல நூறு புதிய கிளைக்கழகங்கள் தோற்றுவிக்கப் பட்டிருக்கின்றன என்பது கழகத்தின் வளர்ச்சிக்கு மேலும் வேறான்றுவதாகும் அதிகமான மக்கள் நம்முடைய கொள்கைகளைப் புரிந்து கொள்ளவும், நமக்கு ஆதரவு தரவுமான நிலைமைகள், இந்தத்தேர்தல் காரணமாக நமக்குக் கிடைத்திருக்கிறது என்பது நமது வரவு வகையில் வைக்கத்தக்கதாகும்.

காங்கிரஸ் இந்தத் தேர்தலில் எதிர்ப்பேயின்றி மிகச் சுலபமாக வெற்றி பெற்று விட முடியும் என்றிருந்த எதேச்சாதிகார எண்ணத்தில் மண் விழச் செய்திருக்கிறது நம்முடைய தேர்தல் பிரச்சாரம். காங்கிரசுக்காரர்களும் போகிற இடமெல்லாம் நம்மைத்தான் தாக்கி நாம் ஒருவர்தான் அவர்களுக்கு எதிர்ப்பாக இருப்பது என்கிற உண்மையை அவர்களே விளம்பரப் படுத்தியிருக்கிருர்கள். ஆயிரம் அசையாத திரு மேனிகள் எல்லாம் வாயிற்படிகளை ஏறி இறங்கவும், பேசாமடைந்தைகள் எல்லாம் வாய்த்திறந்து பேசவுமான அதிசய நிகழ்ச்சிகளெல்லாம் இன்று திராவிட முன்னேற்றக் கழகம் உண்டாக்கியிருக்கிறது. நமது எதிர்ப்பு என்ற ஒன்று இந்தத் தேர்தலில் இல்லாதிருக்குமானல், வீட்டிலிருந்த



படியே, பணத்தைக் கொட்டி ஓட்டு வேட்டையாடி விட்டிருப்பார்கள் காங்கிரஸ் அபேட்சகர்கள் பலர். இந்த நிலைமைகளுக்கான வசதிகளும் சூழ்நிலைகளும் நிச்சயம் இருக்கத்தான் செய்தன. ஆனல் அவையத்தனையும் தூளாக்கிய பெருமை திராவிடமுன்னேற்றக் கழகத்தையே சாரும்.

வளர இருந்த எதேச்சாதிகாரத்தைத் தடுத்து நிறுத்தவும், வட நாடு தென்னட்டை அழித்து வருகிறது என்ற உண்மையை, மறைக்கவோ மழுப்பவோ முடியாமல் காங்கிரஸ் காரர்களைத் திண்டாடவைக்கவும் நம்மாலே முடிந்தது நமக்கு மிகப் பெரிய வெற்றியாகும்.

தேர்தல் என்பது நமது ஜீவமரணப் போராட்டமல்ல என்பதை நாம் தேர்தலுக்கு முன்பிருந்தே சொல்லி வந்திருக்கிறேம். தேர்தலிலே பெறுகிற வெற்றியோ தோல்வியோ நம்முடைய எதிர்காலத்தை அடியோடு மாற்றிவிடும் என்று என்றுமே நாம் நம்பியதில்லை. பல்வேறு முனையில் நாம் நமது கொள்கைகளை வலிவு படுத்த வேண்டுமென்று நினைத்ததின் ஒரு கூருகவே சட்டசபைத் தேர்தலும் இருக்கிற காரணத்தால், அதில் பெருகிற தோல்வியினலே நாம் துவண்டுவிடப்போவதில்லை. இன்றைய தேர்தலில் லாபநஷ்டக் கணக்குப் போட்டுக்கொண்டு இறங்கியவர்களுக்கும், அரசியல் சதுரங்கமாடுகிறவர்களுக்கும் வேண்டுமானல் இந்தத்தேர்தலில் அதிர்ச்சியோ ஆனந்தமோ இருக்கக்கூடும். அத்தகையோர் நமது அனுதாபத்திற்கு உரியவர்கள். அவர்களுக்கு கொள்கை என்பது எதுவுமில்லை. எனவே அவர்களைப்பற்றிக் கவலை கொள்ளவும் தேவையில்லை. கொள்கையைக் குழப்பிக் கொண்டவர்களுக்கும், கூலிக்கு மாரடிப்போருக்கும் இன்றைய தேர்தல் வெற்றிகள் மகிழ்வளிப்பனவாக இருந்தால், அதனலே நமக்கு ஒன்றும் நஷ்டமில்லை. அவர்களுக்கு கிடைத்திருக்கிறதாக நம்பப்படுகிற வெற்றிகள் முற்றுப்புள்ளிகள் இட்டு நிறுத்தப்பட வேண்டிய கடைசிக் கட்டங்களைச் சார்ந்தவை. வெற்றியானலும் தோல்வியானலும் அவைகள் நம்முடைய கொள்கைகளுக்கு மேலும் பதமூட்டுவனவாகவே அமைகின்ற காரணத்தால், நாம் வெற்றி தோல்வி இரண்டையுமே சமமாக நினைக்கிறேம். வெற்றிகண்டதினலே வெறிப்போக்கோ தோல்விகாண்பதினலே, விரக்தி மனப்பான்மையோ கொள்ளாமல் நாம் நமது பாதையில் மேலும் முன்னேறிச் செல்லப் போவது உறுதி. நாம் நடந்தாகவேண்டிய பாதை வெகு தொலைவானது. கடந்தாகவேண்டிய கட்டங்கள் தொல்லையும் துயரமும் நிறைந்தவை. ஆனலும் நாம் அடைந்தாகவேண்டும் என்கின்ற இலட்சியங்கள் உயிரின் மேலானவை என்ற நினைவு நமக்கு என்றும் மாருமல் மறையாமல் இருப்பதால், மனந்தளராமலும், புதுத்தெம்போடும் நமது பாதையில் வேகமாக முன்னேறிச் செல்வோம். எவர் வரினும் அஞ்சோம், நில்லோம், இன்பத்திராவிடம் அடைந்தேதீருவோம். இது உறுதி:

## நாட்டின் நல்லவர்கள்

தமிழ்நாட்டில் அறிவில் சிறந்தவர்கள், ஆற்றல் மிக்கவர்கள், கலையுணர்வு நிறைந்தவர்கள், பண்பாடு நிரம்பியவர்கள் பலர் இடையருமல் தோன்றிவருகிருர்கள் இன்னும் நம்மிடையே பலர் இருக்கிருர்கள். ஆயினும் அவர்களால் நாடுபெறும் பயன் குறைவு. காரணம், அவர்களில் பலருடைய திறமை வீணகிறது. அவர்கள் வாழ்க்கையோடு ஒட்டிச் செல்ல இயலாதவர்களாக, பலருடன் அன்புகொண்டு பழக இயலாதவர்களாக இருக்கிருர்கள். ஒன்று வானவெளியில் காற்றில் மிதப்பதுபோல் கற்பனையில் பறந்து நடைமுறை வாழ்வை மறக்கிருர்கள், அல்லது, கடலின் அடியில் மூழ்குவதுபோல், சுற்றுப் புறத்தினின்று மிருந்து ஒதுங்கி விடுகிருர்கள். தோளோடு தோள் சேர்த்துக் கைகோத்து நிலத்தின்மேல் நடக்கத் தெரியாதவர்களாய்ப் பயன் படாமல் இருக்கிருர்கள். அவர்களில் பலர், உலகத்திற்காகத் தம் கொள்கையைச் சிறிதும் விட்டுக்கொடுக் காமலே, உலகம் தம் விருப்பம்போல் நடக்கவேண்டும் என எதிர்பார்க்கிருர்கள். பிறரிடம் குறை காண்பதில் கூரிய நோக்கு உடையவர்களாய்ப் பிறரைப் பழித்துத் திரிகிருர்கள்; ஆனல் தம் குறையைச் சிறிதும் எண்ணிப் பார்ப்பதே இல்லை. தாம் சொன்னபடி மற்றவர்கள் கேட்டு நடக்க வேண்டும் என விரும்புகிருர்கள்; ஆனல் மற்றவர்கள் சொல்லுக்குத் தாம் செவி சாய்ப்பதே இல்லை; மற்றவர்களுக்கும் பேச்சு உரிமை உண்டு என்ப தையே மறந்துவிடுகிருர்கள், அதனல் அவர்களின் திறமை எல்லாம் வீணகின்றது.

—மு.வ

# ★ உலகின் கடின மொழி ★

துருவப் பகுதிகளில் பனிக்காட்டில் வசிக்கும் எஸ்கிமோக்கள் வாழ்க்கை மிகவும் விசித்திரமானது. கடினமான உழைப்புடன் மனந் தளராது மகிழ்ச்சியுடன் வாழ்கிருர்கள். அவர்கள் வீடும் குடியிருப்பும் செங்கல் சுண்ணும்பு, சிமிண்டு இவற்ருல் ஆனவையல்ல. பனிக் கட்டியாலானவை! உறைந்த பனிப்பாறைகளில் சிறு சிறு கூட்டமாகச் சென்று சீல் முதலிய பிராணிகளை வேட்டையாடி வயிறு வளர்க்கின்றனர். இவர்கள் வாழ்க்கை முறையில் நமக்குப் புரியாத புதிராக இருப்பது இவர்கள் பேசும் மொழியே!

எவருக்கும் புரியாத இவர்களின் மொழி, இவர்களுடன் முதன் முதலில் வாணிபத்தின் பொருட்டுத் தொடர்புகொள்ள விரும்பிய மக்களுக்குப் பெரிய சிக்கலைத்தந்தது. எஸ்கிமோக்களின் மொழி கடினமாயிருந்ததால் கதம்பக் கூட்டு மொழியைக்கண்டுபிடித்து வாணிபம் செய்தனர். இக்கதம்பக்கூட்டு மொழியில் ஆங்கிலம், இந்திய மொழிகள், பிரெஞ்சு, நோர்ஸ், ஹவாய் முதலிய மொழிச் சொற்கள் கலந்திருக்கின்றன. இப்பனிப் பகுதிகளுக்குப் புதிதாக வரும் பார்வையாளர்கள் இம்மொழியையே எஸ்கிமோக்களின் சொந்தமொழி என்று தவருக எண்ணுகின்றனர்!

உலகின் ஏனையப் பகுதிகளிலிருந்து விலகியிருக்கும் இந்தப் பகுதிகளில் வழங்கும் மொழியும் ஏனைய மொழியினின்றும் முற்றிலும் வேறுபட்டும், விலகியும் இருக்கின்றது. உலகில் பெரும்பகுதி உதிரியாக வாழும் மக்களில் முதன்மையானவர்கள் எஸ்கிமோக்கள் தான். ஆனல் இவர்களின் மொழி மட்டும் ஸைபீரியாவிலிருந்து கிரீன்லாந்துவரை ஒரே மொழியாகவே இருக்கின்றது. ஒரு பெரும் சொற்ருெடரில் உணர்த்தக்கூடிய கருத்தை ஒரு சொல்லில் உணர்த்த முடிகிறது இம்மொழியில். சமீப காலம்வரை எழுத்துவடிவும் அச்சுவடிவும் இல்லாமல் இருந்தது. சிறிது சிறிதாக ஆவலால் தூண்டப்பட்டு இப்பகுதிக்கு வரும் பார்வையாளர்கள் உற்சாகத்துடனும், விடாமுயற்சியுடனும் கற்று இக்கடின மொழியைப் புரிந்து கொள்ள ஆரம்பித்தனர். இவர்களில் மிகவும் முக்கியமானவர்கள் அமெரிக்கா, கானடா முதலிய நாடுகளில் இருந்து வந்த சமயப் பணியாளர்களும் அரசாங்க அலுவலர்களும் ஆகும். ஒலி, எழுத்துக்களாக மொழிபெயர்க்கப்பட்டு, எழுத்துக்கள் பெரும் வார்த்தைகள் கொண்ட சொற்ருெடர்களாக ஆக்கப்படுகின்றன. தற்பொழுது எஸ்கிமோ மொழியில் புத்தகங்களும், துண்டுப்பிரசுரங்களும் அச்சிடப்படுகின்றன. எஸ்கிமோக் குழந்தைகள் பள்ளிக்குச் செல்கின்றன. சில வானெலி நிலையங்களில்கூட எஸ்கிமோ மொழியில் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன!





# காலண்டர்

"என்ன ஆரவாரம் கேட்கிறதே!" "காலையிலிருந்தே ஒரே எக்காளமும், பறையொலியும். கடை வீதியிலும், கடற்கரையிலும் வாணிபம் குறைந்து விட்டது. விடுமுறை அறிவிக்கப் பட்டுள்ளது. டைபர் நதிக்கரைத் தோட்டங்களில் கூட்டங் கூட்டமாக மக்கள் நிறைந்துள்ளனர்.

"கோடையின் கொடும் வெய்யல். காலடி வைத்தால் கொப்பளிக்கும் தரை. தண்ணீர்த் தொட்டியின் அருகே இருக்கும் என்னல்கூட வெப்பம் பொறுக்க முடியவில்லை. இந்த நிலையில் கூட்டம் ஏன் கூடுகிறது?"

"வெற்றி வீரர் சீசரே! ரோம் நகர மக்கள் விழாக் கொண்டாடுகிருர்கள்."

"விழாவா? வேடிக்கையாக இருக்கிறது! வெப்பம் மிகுந்த காலம். நதியில் நீர் வறண்டிருக்குமே! அன்றியும் தோட்டங்களில் வறுமையாளர் போல இலையுதிர்ந்து நிற்கும் மரங்களைத்தான் காணமுடியும். புல்தீய்ந்து கொடிகள் துவண்டு, செடிகள் உருமாறி, மூர்க்க குணம் படைத்த வெற்றி வீரர்களால் அழிக்கப்படும் நாட்டைபபோல கதிரவனின் வெய்யலால் கருகியுள்ள தோட்டங்களில் பறவைகள்கூட நுழைய அஞ்சுமே! மனிதர்கள் அங்கு ஏன் கூடவேண்டும்? விழாவின் பெயர் வீனரின் விழா என்று வேண்டுமானல் இருக்கலாம்."

"விழாக் கொண்டாடுவோரைப் பார்த்தால் பரிதாபம்தான் வரும். நிலத்தில் பட்டு கன்னியரின் காலடி சிவந்து விட்டடது. அன்ன நடை மாறி, தடுமாறும் கால்களுடன் சோர்ந்து காணப்படுகின்றனர் பக்கத்திலுள்ள காதலர். காதலை வேண்டியல்ல குளிர்ந்த காற்றை வேண்டித் தவிக்கின்றனர். நரம்புகள் இசையை உண்டாக்கவில்லை. பாடுவோரின் குரல் மட்டுமல்ல, வெளிப்படும் பாட்டும் வறண்டதாயிருக்கிறது. கத்துகின்றனர். எந்த ரோமனும் அதை கீதமென்று சொல்லமாட்டான். மணமிக்க பொடிகள் எங்கும் தூவப்படுகின்றன. அவை காற்றிலே பரவவில்லை, மண்ணிலே கலந்துவிடுகின்றன. ரோம் நகர முதல்வனே! விழாவின் பெயரைக் கேட்டால் தங்களுக்குச் சிரிப்பு வரும். விழாவின் பெயர் வசந்த விழா!"

"வசந்த விழா! அந்த மெல்லிய பெயரைக் கூறக்கூட இந்த வறண்ட கோடையில் நாக்குக் கூசுகிறது. பசும் புற்றரை, பசிய பூங்கா, ஆரவாரத்துடன் ஓடிவரும் டைபர் ஆறு, இவைகளின் மீது படிந்து வரும் இளங்காற்று. அதற்குப் பெயர் வசந்தம்! தளிரசைத்து, மலர் காட்டி, மணம் வீசி நம்மை அழைக்கும் பூங்காவனங்கள். கள்ளுண்டு மயங்கித் திரியும் வண்டுகள் போல, இனிய கானத்தைப் பிதற்றியவண்ணம் காவிடை சுழன்று வரும் காதலர்கள். இள மரங்களைத் தழுவி நிற்கும் மலர்க் கொடிகள் மலர்களிலிருக்கும் மகரத்தை பறித்துச் செல்லும் மாருதம். ஓடுகின்ற மகரந்தத்தின் பின்பாடிச் செல்லும் வண்டினம்! அது வசந்த காலத்தில் வருகிற வசந்த விழா. நீ குறிப்பிடுவது வறண்ட கோடையில் வரும் வசந்த விழா. வீனரின் விழா, நீங்கள் எவ்வளவுதான் கூப்பாடு போட்டாலும் காதல் தெய்வமான வீனஸ் அங்கு வரமாட்டளே!"

"சீசரே! விழாவின் பெயரைச் சொன்ன என்னைக் கோபிக்காதிர், விழாக் கொண்டாடுகிற மக்கள் மீதும் குற்றமில்லை. வசந்த விழா ஆரம்பமாகி விட்டதென்று குருமார் அறிவித்தார். மக்கள் குழுமியுள்ளனர்."

"குருமார் குருடாகி விட்டாரா, வானத்தைப் பார்த்து மண்ணின் நிலையை அறியமுடியாதபடி? நன்ருகப் பார்! வறண்டகோடைக்கும் குளிர்ந்த வசந்தத்திற்குமுள்ள வித்தியாசம். பருவம் கோடையென்று, கோல் பிடித்

துத் துழவும் குருடன் கூறிவிடுவான் சுலப மாக. ஏன் இவ்வளவு பிழை?''

"ஒருவர் மட்டு மல்ல, இவரும், இவருக்கு முன்பிருந்த குருமார்களும் செய்த சதி அது. அவர்கள் நினைத்தபடி யெல்லாம் காலண் டரை அமைத்தனர். அதன் விளைவாக பரு வங்களை சரியானபடி அறிய முடியாமல் மக்கள் மயங்குகின்றனர். அதற்கு உதாரணம் குரு மார் காலண்டர்படி வசந்த விழாநல்ல கோடை யில் வந்துள்ளது.''

*1-1-48! 1948-ம் ஆண்டின் முதல் நாள். 1947-ம் ஆண்டுதன் ஆதிக்கத்தை முற்றிலும் செலுத்தி விட்டது. புது ஆண்டு தொடங்கு கிறது.*

"பூமியில் மானிடராய் ஏன் பிறந்தோம்'' என்று பழி தூற்றுபவர்களையும். "மண்ண கம் முழுவதும் ஆளவே நாம் பிறந்தோம்'' என்று நிலத்தை அழுத்திடும் மமதையாள ரையும் ஒருங்கே சுமந்து, வெப்பமும் குளிரும் மாறி மாறித் தாக்க, முழுமதி மறைந்தும் வெளிப்பட்டும் விளையாடி வர, சூரியனைச் சுற்றி, ஒரு வட்டம் சுழன்றுவிட்டது பூமி. கதிரவனை ஒரு முறை சுற்றி வர பூமி எடுத் துக் கொள்ளும் கால அளவிற்கே ஆண்டு என்று பெயர்வான நூல் ஆராய்ச்சிகளின்படி. ஆண்டின் சரியான அளவு 365 நாட்கள் 5-மணி 48-நிமிடம் 49.7 - விளுடிகளாகும். ஆண்டு தோறும் 365 - நாட்களென்றும், நான்கு ஆண்டுகளுக்கொருமுறை ஒரு நாள் கூட்டுவதன்மூலமும் இந்த அளவு ஒருவாறு பாதுகாக்கப்படுகிறது.

புத்தாண்டு பிறந்ததும் வாழ்த்துகளும், நன்றியுரைகளும் பறிமாறப்படும். அரசியல் ஆருடக்காரர்கள் புத்தாண்டின் ஜாதகத்தைக் கணிப்பார்கள். சென்ற ஆண்டில் அவர்கள் கொடுத்த கணக்கு சரியானபடி நடந்ததா, என்று எவரும் கவனிப்பதில்லை. கவனிப்பவர் களுக்கே கவனம் வராது, 1947-ம் ஆண்டில் நாம் பட்ட அவதிகளும் துன்பங்களும் தீர்ந் தன, இனி 1948-ம் ஆண்டு நல்வாழ்வை நல் கும் என்று நம்பிக்கை யுண்டாக்க வழி முயலு வார்கள். நலிந்தவர்களுக்கு நம்பிக்கையூட் டுவது நல்லதே. ஒவ்வொரு ஆண்டின் தொடக்கத்திலும் வாக்குறுதியளவில் நம்பிக் கைச் செய்திகள் தரப்பட்ட போதிலும், மாறு தல்கள் அதிகமாக நிகழ்வதில்லை. மறு ஆண் டின் தொடக்கத்திலும் அதே பல்லவிதான் பாடப்படுகிறது. மகத்தான மாறுதல்களைப் பற்றி எதுவும் கூற முடியா விட்டாலும் நிச்சய மான மாறுதல் ஒன்று நிகழ்கிறது. அதுதான் உங்களுக்கு எதிரே சுவற்றில் உள்ள காலண் டரை அப்புறப்படுத்துவது. 1947-ம் ஆண்டு காலண்டர் மாற்றப் பட்டு 1948-ம் ஆண்டு காலண்டர் மாட்டப் படுகிறது. சிறு மாறுதல் நிச்சயமாக நடைபெறுகிறது-அவசியமானது

அழகிய ஓவியம் தீட்டப் பட்டப்பட்டிருந்த லும் அதனடியில் பிணைக்கப்பட்டுள்ள நாளும் கிழமையும் காட்டும் ஏடு இனி பயன்படாது ,, நாளுங் கிழமையும் நலிந்தோர்க்கில்லை'' என் பது மூதுரை. இன்று அரசாங்கத்தை நடத் தும் அமைச்சர்களிலிருந்து, அலைந்து திரியும் ஆண்டி வரை நாளும் கிழமையும் தேவைப்படு கிறது. ஆலைத் தொழிலாளர் வேலைநிறுத்தம் என்றைக்கு ஆரம்பமாகிறது என்பதும் ஆருத்ரா தரிசனம் என்றைக்கு என்று பார்க் கவும் காலண்டர் தேவை ஆண்டிக்கும் அமைச் சருக்கும். இருவரும் கையில் பிடித்துள்ள ஏடுகளின் நிலையில், பெயரில் வேண்டுமானால் வேறுபாடு காணப்படும், வசதியுள்ளவர்கள் மதிப்புடையவர்கள் இவர்களுக்கு உயர்ந்த ரகங்களில் காலண்டர்கள் இனமாக வருகின் றன. இல்லாதவர்களுக்கு இனமாகக் கிடைப் பதில்லை. அவர்கள் வருந்துவதில்லை, வருந் தப்படத் தேவையில்லை. கடை வீதியில் இரண் டணா விலையில் கூவிக் கொடுக்க காலண்டர் இருக்கிறது. அச்சுவேலை உயர்ந்த நிலையில் அழகிய காலண்டர்கள்கூட சுலபத்தில் கிடைக்கின்றன.

ஆனல் காலமொன்றிருந்தது, என்றைக்கு மாதம் பிறக்கிறது, ஆண்டு முடிய இன்னும் எத்தனை மாதங்களாகும் எவராலும் கூற முடி யாத நிலை. காலண்டர் இன்று வரையறுக்கப் பட்டு எல்லோராலும் எளிதில் அறியுமளவுக்கு வளர்ந்து விட்டது. வருஷப் பிறப்பு—இப் பொழுது வழக்கத்திலுள்ள வருஷம் எவ்வாறு பிறந்தது? அந்த வரலாறு பல வேடிக்கை யான சம்பவங்களை யுடையது.

* * *

சரித்திர காலத்துக்கு அப்பாற்பட்ட மனி தனுக்குக் காலத்தைக் கணக்கிடுவதற்கான வசதிகள் மிகக் குறைவே. கதிரவனின் போக்கு ஒன்று தான் காலவரையறையின் முதற் பாடம். கதிரவன் உதயமானதும் வெளிச்சம் வருவதும், அது மறைந்ததும் இருட்டு ஏற் படுவதும், இவ்வாறாக உதயமும் மறைவதும் மாறி மாறி பொழுது போவதைக் காட்டின. ஒரு உதயத்திலிருந்து மறு உதயம் வரை உள்ள கால அளவுக்கு நாள் என்று பெயர் ஏற்பட்டது. முதன்முதலில் நேற்று இன்று நாளை என்ற காலப் பெயர்கள்தான் ஏற்பட



டிருக்க முடியும். மொழிவளர்ச்சியில் இம் மூன்று சொற்களைத் தவிர நாளை அடிப்படை யாகக் கொண்ட வேறு தனிச் சொற்கள் உண் டாகாதது கவனிக்கத்தக்கது,

ஒரு பகற்பொழுதிற்கும் மற்றொரு பகற் பொழுதிற்கும் எத்தகைய வித்தியாசமும் ஆதிகாலத்தில் புலப்பட்டிருக்காது. ஆனல் இராக்காலங்கள் குறுகியகால அளவிற்குள் பல மாறுதல்களைக் காண்பித்தன. பகலில் எவ்வாறு ஞாயிறு வழி காட்டியதோ, அவ் வாறே இரவு நேரத்தில் திங்கள் உதவியது. முழு வட்டமாக ஒளிவிட்ட திங்கள் நாள் தோறும் தேய்ந்து கடைசியில் முழுவதும் மறைந்துவிடுவதும், பின் சிறுகச் சிறுக வளர்ந்து முழு உருவத்தை அடைவதும் அவர்களின் கவனத்தை ஈர்த்தது. கதிரவன் உதயமாகி, மறைந்து, மறுபடியும் உதயமாகும் வரை ஏற்பட்ட கால அளவுக்கு நாள் என்று பெயர். அதைப்போல திங்கள் முழு உருவத் திலிருந்து தேய்ந்து முற்றிலும் மறைந்து மறு படியும் முழு உருவத்தை அடையும் வரை யுள்ள கால அளவிற்கு மாதம் என்ற பெயர் ஏற்பட்டது. காலத்தை மதிப்பிடுவதற்கு உத வியாக இருந்த காரணத்தால்தான் திங்க ளுக்கு மதி என்ற பெயரும், அதன்மேல் எழுந்த கால அளவுக்கு திங்கள் என்ற பெய ரும் ஏற்பட்டன, இந்தக் கணக்கின்படி ஒரு மாதம் 29 நாள் கூடியது.

மற்றொரு வகையில் காலத்தைக் கணக்கிடு வதற்கு, இயற்கை வேறுபாடுகள், மழைக் காலம், கோடைகாலம், இலையுதிர் காலம் செடி கொடிகளில் தளிர்கள் உண்டாவது, சம வெளிகளில் புல் செழிப்பாக வளர்தல், ஆறு களில் நீர் பெருகி மறுபடியும் வடிதல் இவை போன்ற பருவ வேறுபாடுகள் 'குறிப்பிட்ட காலத்திற்குப் பின் தவறாது வருவது அவர் களின் கவனத்திற்கு வந்தது. இந்த கால அளவைக் கணக்கிடுவதுதான் ஆண்டு.

ஆங்கில மொழியில் "நான் இருபது கோடை காலங்களுக்கு முன் பிறந்தவன்'' "நான்கு மாரிக்காலங்களுக்கு முன் அது நிகழ்ந்தது'' போன்ற வாக்கியங்கள் பருவ வேறுபாடுகளைக் கொண்டு காலத்தைக் குறிப்பிடுகின்றன.

"கார்காலத்தில் வருவேன்'' என்று காத லன் விடை கூறிப் போவதும், "கார்காலம் நெருங்கிவிட்டது. அவர்காட்டிச் சென்றதால் முல்லை என் தனிமையைப் பார்த்து நகை செய் கிறது. வாடை தொடங்குகிறது எனினும் அவர் வரக்காணேன்'' எனத் தலைவி ஏங்கு வதுமான சங்கப் பாடல்களும் பருவ வேறு பாடுகள் காலத்தைக் கணக்கிடுவதைக் குறிக் கின்றன.

பயிர்த் தொழிலில் ஈடுபட்டவர்களுக்குப் பயிர் வகைகளின் தோற்றமே காலக் கணக் கீடாக அமைந்தது. கடலுக்குப் பக்கத்தி லிருப்போர் கடலலையின் ஏற்றத் தாழ்வுகளை யும், காற்றின் கடுமை, திக்கு இவைகளையும், வலையில் அகப்படும் மீன் இனங்களின் வேறு பாடுகளையுங் கண்டு காலத்தைக் கணக்கிட்ட னர்.

ஒரு பருவத்திற்கும் மற்றொரு பருவத்திற் கும் இடைப்பட்டக் காலத்தைச் சரியாகக் கணக்கிட முயற்சி செய்யப்பட்டது. பருவ வேறுபாடுகளை முன் கூட்டியே தெரிந்து கொள்வது பயிர்த்தொழிலில் ஈடுபட்டவர் கள், ஆடுமாடு மேய்ப்பவர்கள், வெள்ளத் தால் பாதிக்கப்படும் பள்ளத்தாக்குகளில் வசிப்பவர்கள் இவர்களுக்கு அவசியமாகி விட்டது. $29\frac{1}{2}$ நாள் கூடிய மாதம் என்ற அளவு வழக்கில் தந்துவிட்டபடியால் அதைக் கொண்டு வருஷத்தை அளக்க முற்பட்டனர்.

ஒரு மாதத்து 30-நாட்கள் என்று வைத்துக் கொண்டு 12-மாதங்கள் கொண்டது ஒரு ஆண்டு என்று ஆரம்பகாலத்தில் எகுபதிய ரால் கொண்டாடப்பட்டது. 360-நாட்கள் கொண்ட வருஷக்கணக்கு சுமேரியா, சைன போன்ற நாடுகளில் இருந்ததாகத் தெரிகிறது பாபிலோனியர் 29, 30-என்று மாறி மாறி 12-மாதங்களமைத்தனர். இதன்படி ஆண்டு ஒன் றுக்கு 354-நாட்கள் வரும். திராவிட நாகரிகங் கள் தழைத்த சிந்து நதிதீரத்தில் நட்சத்திரங் களின் அமைப்பைக்கொண்டு ஆண்டின் தொடக்க நாள் சரியாக வரையறுக்கப்பட் டிருந்ததாகத் தெரிகிறது.

மேற் குறிப்பிட்டக் கணக்குகள் சரியானவை யல்ல. நாலைந்து ஆண்டுகளுக்குள்ளாகவே ஒரு மாதத்திற்கு மேல் பிசகி விடும். பருவங் கள் இவர்கள் குறித்தபடி வருவதில்லை. ஒவ் வொரு ஆண்டிலும் நாட்கள் குறைந்துவிடு கிற பிழையைத் திருத்தி, யூதர்கள் 19-ஆண்டு களில் 7-மாதங்களையும், கிரேக்கர்கள் 8-ஆண்டுகளில் 3 மாதங்களையும் சேர்த்தனர்.

ஒரு ஆண்டுக்கு 365-நாட்கள் என்பது எகிப்து நாட்டில் கி. மு. 5-வது நூற்றாண்டில் கண்டுபிடிக்கப்பட்டது. எகிப்து நாட்டின் உயிர் நாடியாக விளங்கியது நைல்நதி. நாட் டின் உயிர்நாடியாக விளங்கியது நைல்நதி. நாட்டின் பயிர்த் தொழிலுக்கு நைல்நதியின்

தண்ணீர் தேவையிருந்தது. ஆனல் திடீரென்று நைல்நதியில் வெள்ளம் பெருக்கெடுத்தோடும் பக்கத்திலிருக்கும் வயல்களும், ஊர்ப்புறங்களும் உருத்தெரியாதபடி வெள்ளத்தால் அழிக்கப்படும். வெள்ள நீரைப் பயன்படுத்துவதற்குமுன் வெள்ளம் வடிந்துவிடும். எனவே நைல் நதியில் வெள்ளம் ஆரம்பமாவதை முன் கூட்டியே அறிய வேண்டிய அவசியம் ஏகிப்தியருக்கு ஏற்பட்டது. நைல் நதியில் நீர் பெருகும் சமயத்தில், சிரியஸ் என்ற ஒளிமிக்க நட்சத்திரம் கிழக்கே விடியலில் பிரகாசிப்பதைக் கண்டனர். பல ஆண்டுகளாக நட்சத்திர உதயத்தையும், நைல் நதி வெள்ளத்தையும் சரியாகக் கவனித்த பின்னர் ஆண்டொன்றுக்கு 365-நாள் என்ற முடிவுக்கு வந்தனர். 30-நாட்கள்கொண்ட 12-மாதங்களும், எந்த மாதத்திலும் சேராத 5-நாட்களும் கொண்ட வருஷம் அவர்களால் ஏற்படுத்தப்பட்டது. மாதங்கள் ஒன்று, இரண்டு, மூன்று என்று என்று எண்ணப்பட்டன. பெயர்கள் அளிக்கப்படவில்லை. ஆனல் ஆண்டுகள் காலண்டர் என்ற வரையறையில் சுத்தமாகக் கணிக்கப்படவில்லை.

ரோம் நகரம் வல்லரசின் தலைநகராகாத காலம். வாணிபத்தில் சிறிது வளப்பமெய்தி சிறு அரசாக விளக்கியது. அங்கு சமூக, அரசியல் விவகாரங்களில் மதக் குருமார்க்களுக்குத் தாம் முதலிடம் இருந்தது. அவர்களால் நிர்ணயிக்கப்படுகிற பல காரியங்களில் நாள், கிழமை, மாதம் இவைகளைக் குறிப்பிடுவதும் ஒன்ருகும். மாதத்தின் முதல் நாளை மதத் தலைவர் அறிவிப்பார். இந்தச் செய்தி பறை அறைந்து ஊர் முழுவதும் அறிவிக்கப்படும்.

மாதத்தின் முதல் நாளைக்கு காலண்ட்ஸ் என்று பெயர். லத்தீன் மொழியில் காலண்ட் என்ற சொல்லுக்கு அழைப்பது என்று பொருள். ஆங்கில மொழியில் அழைப்பது என்பதைக் குறிக்கும் கால் என்ற சொல் கூட இதனடியாகப் பிறந்ததாகும். கூவியழைத்து அறிவிக்கப்பட்டதன் காரணமாக மாதத்தின் முதல் நாள் காலண்ட்ஸ் என்றும் அதனடியாக காலண்டர் என்ற பெயரும் உண்டாயின.

ரோம் நாட்டில் மார்ச்சிலிருந்து டிசம்பர் வரை பத்து மாதங்கள்தாம் முதலில் கணக்கிடப்பட்டன. கவனித்துப் பார்த்தால் செப்டம்பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர் என்ற பெயர்கள் 7-வது, 8-வது, 9-வது, 10-வது மாதம் என்ற அர்த்தமுடையன. கொஞ்ச காலத்திற்குப் பின் பாபிலோனியர்களைப் போல 354 நாட்கள் கொண்ட 12-மாதங்கள் வழக்கில் வந்தன. இரட்டைப் படை எண் நல்லதல்ல என்ற எண்ணம் அவர்களுக்கிருந்ததால் ஆண்டுக்கு 355 நாட்கள் கணக்கிடப்பட்டன. 12 மாதங்களும் முறையே 29, 28, 31, 29, 31, 29, 31, 29, 29, 31, 29, 29 நாட்களுடையன.

இந்தக்கணக்கின் பேரில் ஆண்டொன்றுக்கு 10 நாட்களுக்கு மேல் குறைந்துவிடுகிறது. நாலைந்து ஆண்டுகளுக்குள் ஒரு மாதத்திற்கு மேல் பிசகிவிடும். இந்தப் பிழையை நீக்க கிரேக்கர்கள் செய்ததைப் போல மூன்று நான்கு ஆண்டுகளுக்கொரு முறை ஒரு மாதம் கூட்டப்பட்டது. இவ்வாறு ஆண்டுக்குள்ள மாதங்களைக் கூட்டிக் குறைக்கும் உரிமை குருமார்கள் கையில் இருந்தது. இந்த உரிமை நாளடைவில், வீணைக் கையாளப்பட்டது. இரண்டு மூன்று ஆண்டுகளுக்கொரு முறை வழக்குகளைத் தீர்க்க நீதிபதியைத் தேர்ந்தெடுப்பார்கள். குறிப்பிட்ட ஆண்டுகள் முடிந்ததும் நீதிபதி தன் இடத்தைக் காலி செய்வார். மற்றொருவர் அந்த இடத்துக்கு தேர்ந்தெடுக்கப்படுவார். ஒரு நீதிபதி, தனக்கு வேண்டியவனுயிருந்தால் வருஷத்திற்கு இரண்டு மாதங்களைக் கூட்டி அவனது வேலையை அதிக நாள் நீடிக்கச்செய்வார் குருமார். வேண்டாதவனுயிருந்தால் அந்த ஆண்டை சீக்கிரம் முடித்துவிடுவார். தீர்ப்பு வாங்குவதைப்போலவே வரி வசூலிப்பது, குத்தகை கொடுப்பது போன்ற பல வேலைகள் குறிப்பிட்ட வருஷங்கள் முடிந்ததும் ஒருவருடமிருந்து மற்றொருவருக்குப் போய் விடும். தனக்கு வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் இவர்களைக் கணக்கிட்டுதான், குருமார் ஒரு வருஷத்தின் மாதங்களைக் கணக்கிட்டார். எனவே காலவரையறை பிசகிவிட்டது. குருமார் குறிப்பிடும் எவையும் சரியான பருவத்தில் வருவதில்லை.

ஜூலியஸ் சீசர் அதிகாரத்துக்கு வந்த பொழுது, ரோம் காலண்டர் குருமார்களின் ஆதிக்கத்தில் மிகவும் பிசகியிருந்தது. அதன் உச்ச நிலையில்தான் நாம் ஆரம்பத்தில் குறிப்பிட்டபடி வசந்தவிழா கோடையில் வந்தது. நாட்டின் அரசாங்கத்தையும், சட்டதிட்டங்களையும் ஒழுங்கு படுத்துவதற்கு முன் காலஅமைப்பைக் கட்டுப்படுத்த சீசர் முற்பட்டான். பலஆண்டுகளாக வெற்றிப் பாதையில் ஐரோப்பிய நாடுகள் பலவற்றைச் சந்தித்திருக்கிருன்.

அவனது கரம் ஒருசமயம் எகிப்து நாட்டையும் எட்டிப் பிடித்தது. நைல் நதியில் அன்னப் பட்கில் உல்லாசமாக வாழ்ந்த ஆரணங்கு கிளியோப்பட்ராவின் அழகு கண்டு வியந்தவன் மட்டுமல்ல, அதே நைல்நதிக்கரையில் இரவு பகலாகக் கஷ்டப்பட்டு வானத்தில் மின்னிடும் நட்சத்திரங்களின் போக்கை ஆராய்ந்தறிந்த வான நூல் வல்லுநரின் பரந்த அறிவையும் கண்டு வியந்தவன். ஆகவே ரோம் காலண்டர் அமைப்பு, தவறு என்று தெரிந்த பொழுது அதைத் திருத்தியமைக்கு மாறு சொரிஜினஸ் என்ற எகிப்து வான நூல் அறிஞரை அழைத்தான். ரோம் காலண்டரில் அதுவரை நேர்ந்த பிழைகள் கண்டுபிடிக்கப்பட்டு, புதிய காலண்டர் அமைக்கப் பட்டது. திருத்தப்பட்ட காலண்டருக்கு ஜூலியன் காலண்டர் என்று பெயர். அதுதான் தற்பொழுதுள்ள காலண்டர் அமைப்புக்கு அடிப்படையாக உள்ளது.

சீசர் காலம்வரை மார்ச்மாதம் தான் ஆண்டுக்கு ஆரம்ப மாதமாக யிருந்தது. சீசர் அதை மாற்றி ஜனவரி 1-ந் தேதியை வருஷ ஆரம்பமாக்கினன். ஜூனுக்கு அடுத்த கியுன்டிலியஸ் என்ற மாதப் பெயரை மாற்றி ஜூலை யென்று தன் பெயரால் அதை அழைத்தான். ஜூலியன் காலண்டர் படி ஆண்டு ஒன்றுக்கு 365 நாள். நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை 1-நாள் கூட்டப்படும். 366-நாள் கூடிய அந்த ஆண்டு (லீப் வருஷம்)என்று கூறப்பட்டது. ஜூலியன் முறைப்படி மாதங்களும் நாட்களும் கீழ்க்கண்டவாறு முதன்முதலில் வகுக்கப்பட்டன.

| | |
|---|---|
| ஜனவரி | ... 31 |
| பிபரவரி | ... 29 |
| அல்லது 30 (கூடிய ஆண்டு) | |
| மார்ச் | ... 31 |
| ஏப்ரல் | ... 30 |
| மே | ... 31 |
| ஜூன் | ... 30 |
| ஜூலை | ... 31 |
| செக்ஸ்டிலியஸ் | ... 30 |
| செப்டம்பர் | ... 31 |
| அக்டோபர் | ... 30 |
| நவம்பர் | ... 31 |
| டிசம்பர் | ... 30 |

ஆக365-அல்லது 366(கூடிய ஆண்டு)பிழைபாடுகளை நீக்கி கி.மு. 46-ல் ஜூலியன் காலண்டர் நடைமுறையில் வந்தது. பிசகைத் திருத்தி புதுமுறை அமைப்பதற்காக கி.மு. 46-ல் மாத்திரம் 445-நாட்டின் கொண்டதாக்கப் பட்டது. அதனல் கி.மு. 46 "குழப்பமான ஆண்டு" என்று பெயர்பெற்றது.

பிழை செய்வதற்காகவே குருமார்கள் ஏற்பட்டனர் போலும்! ஏனென்ருல் நான்கு வருஷத்திற்கு ஒருமுறை என்பதைத் தவருக அர்த்தம் செய்து மூன்று வருஷத்திற்கு ஒரு முறை ஒரு நாள் அதிகப்படியாக சேர்த்தனர். இதனல் காலண்டர் சிறிது பிசகியது. ஜூலியன் காலண்டர்படி 4-வது 8-வது, 12-வது ஆண்டுகள் 366-நாட்கள் கொண்ட கூடிய ஆண்டுகள்- 4-வது ஆண்டு கூடிய ஆண்டு என்று அறிவித்தபின், குருமார்கள் தவருக 4-வது, 5-வது, 6-வது, 7-வது என்று கணக்குப் போட்டு 7-வது ஆண்டிலேயே 366-நாட்கள் உண்டாக்கினர். இந்தப் பிழை கி. மு. 8-வரை நிகழ்ந்தது.

அகஸ்டஸ் அதிகாரத்திலிருந்த பொழுது, பிழை கண்டு பிடிக்கப்பட்டது. குருமார்கள் ஜூலியன் காலண்டரைவிட 3-நாட்கள் அதிகமாகக் கணக்கிட்டிருந்தனர். எனவே கி. மு. 8-க்குப் பின் வந்த 12-ஆண்டுகள் சாதாரண ஆண்டுகளாக (365-நாட்கள் கொண்டதாக) ஏற்படுத்தப்பட்டன. காலண்டரில் தன் பெயரையும் நுழைத்து, சிறிது மாற்றம் செய்தான் அகஸ்டஸ். ஜூலியஸ் சீசர் பெயரால் வழங்கிய ஜூலை மாதத்திற்கு அடுத்த மாதத்தை ஆகஸ்ட் என்று பெயரிட்டான். ஜூலியன் காலண்டர் கணக்குப்படி ஜூலைக்கு அடுத்த மாதத்திற்கு 30-நாட்கள்தா னிருந்தன. ஜூலியஸ் சீசருக்குதான் எவ்விதத்திலும் குறைந்தவனல்ல என்பதற்காகப் பிப்ரவரியி லிருந்து ஒரு நாளை எடுத்து ஆகஸ்டில் சேர்த்து 31-நாட்களாக்கினன். அதற்கடுத்த செப்டம்பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களை 30, 31, 30, 31 நாட்களாக்கினன். தற்பொழுதுள்ள காலண்டர் இந்த முறையிலேயே வழங்குகிறது.

ஆண்டு ஒன்றுக்கு 365 நாள் என்று கணக்கிட்டுத்தான் ஜூலியன்காலண்டர் வகுக்கப்பட்டது. இது உண்மையான வருஷ நேரத்தைவிட 11-நிமிடங்கள் கூடுதலானது. நூறு வருஷங்களில் முக்கால் நாள் அதிகமாகி விடும். இந்தப்பிசகு 1577-ல் கிரிகோரி என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. அதுவரை 11-நாட்கள் வித்தியாசம் வந்தது. இதைநீக்க போப் கிரிகோரி1582-அக்டோபர்4-ந் தேதிக்கு மறுநாளை அக்டோபர் 15-ந் தேதி என்று வரையறுத்தார், பின் வழக்கம்போல் மாதங்களும் நாட்களும் தொடர்ந்தன.

நூறு வருஷத்தில் முக்கால் நாளொன்ருல் நானூறு வருஷத்தில் மூன்று நாட்கள் வித்தியாசம்வரும். இதைத் தடுக்க கிரிகோரி ஒரு வழி செய்தார். ஜூலியன் காலண்டர்படி, ஒரு வருஷத்தின் எண்ணை 4-சரியாக வகுத்தால் அந்த ஆண்டு கூடிய ஆண்டு (366-நாட்களைக் கொண்டது) அதன்படி 1600, 1700, 1800, 1900, 2000 இவையெல்லாம் கூடிய ஆண்டுகளாகும். நூற்றுண்டுகளெல்லாம் நான்கால் சரியாக வகுக்கப்படுமாதாலால், அவையெல்லாம் கூடியஆண்டுகளாகும்.கிரிகோரி அதைமாற்றி நூற்றுண்டுகளை 400 சரியாக வகுத்தால் மட்டுமே அவை கூடிய ஆண்டு என ஏற்படுத்திஞர். அதன்படி 1600, 2000 மாத்திரமே கூடிய ஆண்டுகளாகும். 1700, 1800, 1900-சாதாரண ஆண்டுகளே. இதனுல் 400-ஆண்டுகளில் 3-நாட்கள் விடப்படுகின்றன.

இந்தத் திட்டத்தை ஸ்பெயின், போர்ச்சுகல் உடனே ஒப்புக்கொண்டன. பிரான்சு, டச்சு, ஹாலந்துநாடுகளும் பழக்கத்திற்குக் கொண்டு வந்தன. இங்கிலாந்து, ருஷியா நாடுகள் ஒப்புக்கொள்ளவில்லை.

கிரிகோரி திட்டத்தைஒப்புக்கொள்ள 1585ல் இங்கிலாந்து பார்லிமெண்டில் சட்டம் கொண்டு வந்தார்கள். எதிர்ப்பு வந்தபடியால் பிரபுக்கள் சபையில் சட்டம் கைவிடப்பட்டது. மறுபடியும் 1751-ல் பார்லிமெண்ட் சட்டம் இயற்றியது. இங்கிலாந்தில் அதுவரை மார்ச் 25-ந்தேதி தான் ஆண்டின் தொடக்க நாள். அது ஜனவரி முதல் தேதிக்கு மாற்றப்பட்டது. கிரிகோரிதிட்டப்படி 11-நாட்கள் கழிக்கப்பட்டு, 1752-செப்டம்பர் 2-ந்தேதிக்கு மறுநாள் 1752 செப்டம்பர் 14-என்று ஆக்கப்பட்டது.

இது சாதாரண திருத்தமாக நமக்குப் பட்ட போதிலும், மாறுதல் விரும்பாத ஆங்கில மக்களுக்கு இந்தச் சட்டம் ஆத்திரத்தைக் கொடுத்தது. எல்லோரும் ஆட்சேபித்தனர். கண்டனக் குரல்களும், எதிர்ப்புக் கோஷங்களும் மந்திரி சபையைத் தாக்கின. "கடவுள் கொடுத்த நாட்களைத் திருடும் கயவர்களை" எல்லோரும் கண்டித்தனர். நாடெங்கும் கலகங்கள். பிரிஸ்டல் நகரில் மூண்ட கலகம் இரத்தக் களரியில் மூடிந்தது. வீதியில் பிணங்கள் விழுந்தன. மறு தேர்தல் வந்தபொழுது "எங்களுடைய 11 நாட்களைத் திருப்பித்தா" என்ற தேர்தல் பிரசாரம் வலுத்து, ஆர்ப்பாட்டங்களும், ஆவேசப் பேச்சுகளும் எழுந்தன. காலண்டரைத் திருத்தியமைக்கக் காரணமாயிருந்தவர்கள் வீட்டின் முன் மக்கள் கூடி பழிதூற்றினர். சிறிய திருத்தமாயிருந்தால் கூட, அது மக்களிடம் எவ்வளவு கொதிப்பை உண்டாக்குகிறது என்பதும், அதைக் கொண்டு வரப் பாடு படுபவர்கள் மக்களால் எவ்வளவு பழி தூற்றப்படுகின்றனர் என்பதும் இந்தச் சிறு உதாரணத்தால் விளங்கும். சட்டம் நிறைவேற்றுவதற்குக் காரணமாயிருந்தவர்களில் பிராட்லி என்ற கணித அறிஞரும் ஒருவர். அவர் நீண்ட காலம் நோய்வாய்ப்பட்டு இறந்தார். "பழைய காலண்டரில் பதினொரு நாட்களை "அழித்த காரணத்தால், ஆண்டவன் தண்டிக்கப் பார்த்து தீராத நோய் கொடுத்து தண்டித்தார்" என்று ஊர் மக்கள் பேசிக் கொண்டனர்.

பிரஞ்சும் புரட்சிக்குப் பின் காலண்டரை மாற்றியமைக்க பிரஞ்சு அசம்பிளிவிரும்பியது, புரட்சி ஆரம்பமான 22-9-1792.லிருந்து வருடங்களைக் கணக்கிட முடிவு செய்தனர். 30-நாட்களைக் கொண்ட 12 மாதங்களும், எந்த மாதத்திலும் சேராத 5 நாட்களும் கொண்டது. ஒரு ஆண்டு. தனித்து நிற்கும் ஐந்து நாட்களும் முறையே நற்குணம், அறிவு, உழைப்பு, கருத்து, பலன் இவைகளின் அறிகுறியாகப் பெயரிடப்பட்டன. நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை வருகிற அதிகமான ஒரு நாள் புரட்சி நாள் என்று அழைக்கப்பட்டது. மாதங்களின் பழைய பெயர்கள் மாற்றப்பட்டு, பின் வருபவைகளைக் குறிக்கும் பெயர்கள் இடப்பட்டன. திராட்சை, கடுங்காற்று, மழை காற்று, பனி, மழை, பருவக்காற்று, மொக்கு, மலர், புல்வெளி, அறுவடை, வெப்பம், கனி.

பிரெஞ்சுப் புரட்சி அசம்பெளியில் செய்யப்பட்ட இந்த முறை நெடுநாளைக்கு நீடிக்கவில்லை. நெப்போலியன் ஆட்சிக்கு வந்த பொழுது பழைய முறை மீண்டும் அமுலுக்கு வந்தது.

கிரிகோரி காலண்டர் திருத்தம் ருஷிய நாட்டில் 1918 வரை ஒத்துக்கொள்ளப் படவில்லை. இதனுல் வெளிநாட்டுத் தேதிக்கும் ருஷியாவில் வழங்கும் தேதிக்கும் 13 நாட்கள் வித்தியாசமிருந்தது. ருஷியப் புரட்சிக்குப் பின் 1919ல் காலண்டர் திருத்தியமைக்கப்பட்டது. அதனுல்தான் ருஷிய நாட்டுப் பழைய காலண்டர் தேதிப்படி அக்டோபர் 25ல் தோன்றிய புரட்சியை நவம்பர் 7-ல் கொண்டாடுகிருேம். அக்டோபர் புரட்சி என்று பிரசித்தி பெற்ற ருஷிய புரட்சி நவம்பர் மாதத்தில் கொண்டாடப்படுவது பலருக்கு ஆச்சரியத்தையே கொடுக்கும்.

துருக்கியில் 1926ல் கிரிகோரி திருத்தத்துடன் கூடிய ஜூலியன் காலண்டர் முறை அமுலுக்கு வந்தது.



இரண்டாயிரம் ஆண்டுகளாக வளர்ந்துள்ள காலண்டரின் வரலாறு இது. அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகளில் முற்றிலும் வழங்குவது மேலே விளக்கப்பட்ட காலண்டர் முறையே. மேலை நாடுகளுடன் தொடர்புடைய மற்ற நாடுகளிலும் அது பரவியுள்ளது. ஆனுல் உலக முழுவதும் சாதாரண மக்களனைவரின் பழக்கத்திற்கு வருமளவுக்கு இன்னும் பரவவில்லை. இருண்ட ஆப்பிரிக்காவிலும். அமேசான் நதி தீரத்திலும், திபேத் பீட பூமியிலும், மயோரி வகுப்பினரிடையும் பழைய காலக் கணக்குகளே காணப்படுகின்றன. இன்றும் தமிழ் நாட்டின் சிற்றூர்களில் தமிழ் மாதத் தேதிகளே வழக்கில் இருக்கின்றன. காரணம் புது முறை என்ற காரணத்தால் வழக்கிற்கு வராதது மட்டுமல்ல பழைய முறை சரியாகக் கணிக்கப்பட்டிருந்ததால் புது முறையின் அவசியம் அவர்களுக்குப்படவில்லை.

பல பிசகுகள், திருத்தங்கள் இவைகளுக்குப் பின் காலண்டர் நம் கைக்கு வந்துள்ளது. மாறுதல்கள் ஒரு முடிவுக்கு வந்து விட்டன என்று கூறமுடியாது. ஒரு நூற்றுண்டில் சரியானது என்று கருதப்பட்ட பல கருத்துக்களும் அமைப்புகளும் மறு நூற்றுண்டில் மாற்றப்படுகின்றன. காலத்தைச் சரியாகக்காட்டிய போதிலும் காலண்டரின் அமைப்பு முறை திருப்திகரமானதல்ல என்று அறிஞர் கருதுகின்றனர். எனவே மீண்டுமோர் மாற்றம் தேவை என்று கூறுகின்றனர். அவர்கள் காட்டுகிற அமைப்பு முறை அமுலுக்கு வர எவ்வளவு காலம் பிடிக்கும் என்று கூற முடியாது. நலம் பயக்கத்தக்க மாறுதல் வந்தால் அதை அனைவரும் ஏற்றுக்கொள்ள வேண்டும். முதலில் ஒத்துக்கொள்ளாவிட்டாலும் காலப்போக்கில் மாறுதல் வந்துதான் தீரும்.

## பயன் நல்கும் பாட்டை!



"இளைஞர்களே, கிராமத்திற்குச் செல்லுங்கள்; நிலங்களில் உழையுங்கள்; அமைதியான இன்பத்தைப் பெறுங்கள்" என்று வாயால் சொல்லிவிட்டு, நகரங்களில் உழைக்காமலே செல்வம் சேர்ப்பதற்கும் ஆடம்பர வாழ்வு வாழ்வதற்கும் சிலருக்கு வாய்ப்புக் கொடுக்கலாகாது......

உழைக்காமலே பெருவாழ்வு வாழ்வதற்குச் சிலருக்கு உள்ள வாய்ப்பும், சிறிது உழைத்தே நல்வாழ்வு வாழ்வதற்குப் பலருக்கு உள்ள வாய்ப்பும் நகரங்களில் ஏற்படுத்திவிட்டு, அவற்றைப் பெறமுடியாத இளைஞர்களை மட்டும் கிராமத்திற்குப் போகும்படியாக அறவுரை கூறுவதால் பயன் விளையாது.

அறவுரை கூறுவதால் ஒரு சிலரைத்தான்-இயல்பாகவே பண்பட்டுவரும் ஒரு சிலரைத்தான் - திருத்த முடியும். மற்றவர்களைத் திருத்த அறவுரை பயன்படுவதில்லை. பயன்படுவதானுல், புத்தரும் ஏசுவும் வள்ளுவரும் காந்தியும் பிறந்தபிறகு அறிஞர்களின் மூளைகள் அணுக்குண்டையும் நீரகக்குண்டையும் கண்டுபிடிப்பதில் முனைந்திருக்குமோ? அறவுரையால் பெரும்பாலோரின் மனத்தைத் திருத்தலாம் என்பது வீண் கனவு; அழும் குழந்தையை முத்தமிட்டு அமைதிப்படுத்த முயலும் தாயின் முயற்சி போன்ற வீண்கனவுதான். வாழ்வின் அடிப்படைத் தேவைகளைத் தந்து, தக்க சட்டமும் சூழ்நிலையும் ஏற்படுத்தினுல் தான் பெரும்பாலோரைத் திருத்த முடியும்.

—மு. வ.

(நாடகம்)—சென்ற இதழின் தொடர்ச்சி

# வெற்றி யாருக்கு?

(அருணன்)

காட்சி—12

இடம்: விடுதி.

உறுப்பினர்: அமைச்சர், சேனைத் தலைவர். தூதுவர், விடுதி அதிகாரி.

நிகழ்ச்சி: விடுதி அதிகாரி எல்லோரையும் வரவேற்று இருக்கை தந்து அவர்கள் அருந்துவகைக்கு ஏற்பாடு செய்யச் சென்று விடுதல்......

விடு-அதி: வாருங்கள்! வாருங்கள்! நெடு நாளாயிற்று உங்கள் வருகைக்கு விடுதி இருப்பிடமாகி! இப்படி அமருங்கள்.

அமை: அதிகாரியே! தாமும் தம்மைச் சார்ந்தாரும் நலந்தானே! தமதுபணியிலும், பிற நடைமுறைகளிலும் எந்தவிதப் புகாரும் வாராததுகண்டு பாராட்டுகிறேன்.

விடு-அ: எங்கே இப்படிப் படையின்றிப் புறப்பட்டு விட்டீர்கள்!

அமை: அரசியலார் புறப்பட்டால் படைகளும் உடன் செல்வது அரசியல் அமைதிக்குக் களங்கம் விளைவிப்பதாக வல்லவோ ஆகும்! படைகொண்டு செல்லும் தருணம் நேருகின்ற போதன்றித் தனிக் காரியங்களுக்காகச் செல்லும்போது படை கூட்டிச் செல்லுதல் பகட்டாக ஆகுமே யல்லாது தக்கதாகாது. அந்த நிலையுள்ள அரசியலும் அதிக நட்பைப் பெறமுடியாது......

வி-அ: இப்போது......

அமை: பாசறைக்குச் செல்கிறோம்......

வி-அ: கோரி நாட்டின் போர் மீண்டும் தொடக்கமா?

அமை: கோரி நாட்டிடையே போர், இனி இல்லை என்பதன் விளக்கம் பாசறையிலே இருக்கிறது. அதனைகண்டு களிக்கும் விருந்தாடிகளாகவே செல்கிறோம்.

வி-அ: விளங்கவில்லையே!

அமை: வெற்றித்தோளர் வீரவர்மரின் பாசறையி லிருக்கிறார்.

வி-அ: கைதியாகவா,

அமை: சாதாரணமானவர்கள் கேட்கும் கேள்வியையே நீரும் கேட்கிறீர். நல்ல போர் வீரர். அடிக்கடி அரசியலாரின் தொடர்பு கொள்ளும் தன்மையால் அரசியல் தந்திரங்கள் பல அறிந்தவர் நீர் எண்ணத்தான் கூடுமா வெற்றித்தோளர் கைதியாவாரென்று......

வி-அ: இல்லை, அமைச்சர் பெருந்தகையே! எந்தவகையிலும் வீரவர்மரின் பாசறையில் வெற்றித்தோளர்.'' எதிர் பார்க்கக்கூடிய செய்தியா இது?

அமை: எதிர்பாராத நிகழ்ச்சிகள் பல அரசியலிலே ஏற்படுதல் இயற்கைதானே! இதில் ஆச்சரியமேன் உமக்கு! இந் நிகழ்ச்சிகளின் காரணம் அறிந்து மகிழவே நாங்களும் செல்கிறோம் அறிவிப்புக் கிடைத்த பின்னர்......

வி-அ: நானும் வருகிறேன்.

அமை: உமது ஆவலைப் பாராட்டுகிறேன். தருவன அறிந்து தக்கன நிகழ்த்தி நிகழ்வின் உட்படுவதே தருகணாளரின் கடமை: ஆகவே விடுதிப்பணி குறித்து வேண்டுவன செய்து வைத்த பிறகு வந்துசேரும். உமக்குப் பாசறை நுழைவு மறுக்கப்பட மாட்டாது. நாங்கள் புறப்படுகிறோம்.

வி-அ: தொடர்ந்தே நானும் வந்து சேருகிறேன். (செல்கின்றனர்—செல்கிறார்).



காட்சி—13

இடம்: வீரவர்மன் பாசறை.

உறுப்பினர்: வீரவர்மன், வெற்றித் தோளன், அமைச்சர், படைத்தலைவர்: தூதுவர் மற்றும் சிலர்.

நிகழ்ச்சி: ஏனையோர் வருகின்றனர், வீரவர்மன் யாவரையும் வரவேற்று இருக்கைதந்து கூடிக்கலந்து பேசியிருத்தல்.

அமை, வணக்கம்:

வீர: வாருங்கள், அமைச்சரே! வந்து விடுவீர்கள் என்ற நம்பிக்கையுடன் எதிர் பார்த்துக்கொண்டு தானிருக்கிறேன்.

(எழுந்துவந்து அழைத்துக்கொண்டு செல்லுதல்)

வெற்றித்தோளர் ஒரு இருக்கையில் தனிமையில் உட்கார்ந்திருத்தல். அங்குவந்த அமைச்சர்......

வீர. எங்கள் நாட்டு அமைச்சர்!

அமை: வணக்கம்!

வெற்: மகிழ்ச்சி! தங்களையெல்லாம் காணப் பெரிதும் மகிழ்கிறேன். அமருங்கள்.

அமை: நாங்களல்லவா தங்களைக் கண்டு மகிழ வந்திருக்கிறோம்......

வீர: பாரும் தானைத் தலைவரே! பக்கத்தில் அமர்ந்து இரு கண்களும் குளிரப் பாரும். போரில் எட்ட நின்று கண்டு, ஆற்றல் குறித்து அவ்வப்போது மகிழ்வீரே அந்த அடலேறு இன்று அவமானத்துடன் அடுத்தவனென்றும் பாராது வர நேர்ந்திருப்பதையும், அதைச் சிறிதும் உணராதோர் அங்கே இன்னமும் வீற்றிருப்பதையும், அதைப் பற்றிய கவலையே சிறிதுமின்று, அமைதியும் மன்னிக்கும் மனப்பான்மையைக்கொண்டு இவர் வீற்றிருப்பதையும் பாரும்.

வெற்: வீரவர்மா! இன்னமும் நீ வேகம் நிறைந்த உள்ளத்துடனேயே இருக்கிறாய். என்னை நாடு கடத்தியதால் மகிழ்பவர் என் நாட்டவரல்ல! வந்து இடந்தேடி இனிது வாழ எண்ணங் கொண்டவர்கள்; அவர்கள் வென்றார்கள். நான் அங்கிருந்து வந்ததே, நாடு கடத்தப்பட்டு விட்டதே நல்லதென்பதை எவரும் மறுக்க இயலாது. நன்றாகச் சிந்தித்துப் பார். என்னை நாடு கடத்தி விட்டால்தான் தாங்கள் வாழ முடியும் என்ற எண்ணம் கொண்டு அதற்குத் தக்கவாறு மக்கள் யார் சொல்லைத் தட்டமாட்டார்களோ அவர்களைத் தேடிப்பிடித்து தங்கள் கைக் கருவியாக்கிக்கொண்டு செயலாற்ற முனைந்திருக்கிறார்களென்றால் அவர்கள் முயற்சி எவ்வளவு உன்னிப்பான வகையிலிருந்திருக்கிறதென்பதைக் கருதிப் பார். ஆனால் நாட்டு மக்கள் எதையும் தங்களின் மேம்பட்டவர் சொல்லுக்கு எத்தகைய மதிப்புத்தர வேண்டுமென்று ஆராயுந் திறனை என்னை நாடு கடத்தியதன் மூலந்தான் தெரிந்து கொள்வார்கள். நான் வெளியேற மறுத்திருந்தால் யாரென்ன எதிர்க்க முடியும்? அல்லதுவற்புறுத்தி அனுப்பமுடியும்? அவற்றை நான் அறியாதவனல்ல! எப்போது அவர்கள் உள்ளத்திலே மாறுபட்ட கருத்துப் புக இடமேற்பட்டு விட்டதோ, அப்போதே அந்த நினைவை மாற்றும் வகையை நாம் செய்ய வேண்டும். அதுதான் தலைமை வகிப்போரின் கடமை. அதையேதான் நானும் செய்தேன். அவர்களை எதிர்த்து அவர்களுடனேயே இணைந்திருக்க வகைசெய்து கொண்டிருப்பேனானால் இன்னும் சின்னாட்களிலெல்லாம் நான் அவர்கள் அடைந்துவிட்ட தன்மைகளை மாற்றமுடியாத அளவுக்கு மாறி விடுவேன். நிலைமை மோசமாய் விடும். நான் வெளியேறுதிருந்தால் என் நினைவு கூட அவர்களுக்கு ஏற்படக் காரணமில்லை. அவர்கள் நிலையை எடுத்துக் காட்டவும் வகையிருக்காது. இப்போது என்னைப் பற்றிய எண்ணம் அவர்கள் வசமிருந்து கணமும் விலகாது. ஒவ்வொரு செயலினும், ஒவ்வொரு நிகழ்ச்சியிலும், என்னைத் தொட்டுக்கொண்டே யிருக்கும் அவர்கள் இதயம். நடைமுறை மாற்றங்களில் என் தன்மையை அவர்கள் நினைத்துத்தான் தீரவேண்டும். நினைப்பார்களென்ற நம்பிக்கை எனக்குண்டு.

வீர: அவர்கள் நினைக்க மறந்தாலும் என் தூதுவனின் வருகை அவர்களை நினைப்பற்ற வகையில் நிலைக்கச் செய்துவிடும். செய்தியிற் காணும் சொற்கள் அவர்களின் சிந்தனையைச் சிதைக்கும். செய்வதின்ன வென்றறியாது திகைப்பை யூட்டும்.

வெற்: நடப்பது நடக்கட்டும். வில்லிலிருந்து விடுபட்ட அம்பு, குறிதவறி விட்டாலும் தூணிக்கா திரும்பவரப்போகிறது? அமைச்சரே எவ்வாறிருக்கிறீர்? உம்மைப்

போன்ற ஒரு பொறுப்பு மிக்கவர் கிடைத்திருப்பதனால்தான், வீரவர்மன் அரண்மனையும் அரசுமுறையும் மறந்து, போரிலும் நாடு பிடிப்பதிலும் அதிக நாட்டம் வைத்து முனைகிறான். நல்ல திறமையாளி.

அமை : என் திறமையால் ஏதுபயன். ஆக்கி வைத்திருப்பதை அள்ளித்தருவது போன்றது என்செயல். ஆனால் ஆக்கும் திறம் வல்ல உங்கள் போன்றாரின் கைவண்ணங்களே எங்கள் காரியத்திற்கு முதற்படி.

வெற் : முதற்படியும் முழுப்படியும் நல்லதொரு அமைச்சு இல்லாவிடில் அரசு ஆடி வீழ்ந்து அழிந்துபடும்.

அமை : இவர் நமது தானைத் தலைவர் வியன் மள்ளர். சிறந்த போர்வீரர். தங்களைக் காண வேண்டுமென்ற பேரவாக் கொண்டவர். வந்ததுமுதல் இமை தட்டாது பார்த்து மகிழ்கின்றார்.

வெற் : நானும் அவர்பார்வையின் குறிப்புணர்ந்துதான் சற்றும் அசையாதிருந்து அவர் கருத்துக்கு இயன்றவரை நிறைவளிக்கிறேன்.

வியன் : ஆஹா என்ன புலன் நுணுக்கம், எவ்வளவு நுண்ணுய்வு.

அமை : வியப்பென்ன மன்னரே! போரிலும், அரசியலிலும் அருந்திறம் வாய்ந்த வெற்றித் தோளரிடம் அவை ஒரு புதுமைப் பொருளா?

வெற் : 'புதுமையில்லை பழமை' என்பதை அமைச்சர் எடுத்துக்காட்டுகிறார்.

அமை : அப்படியல்ல வீரப்பெருந்தகையே? உமது யுத்தவியூகமும் அரசியல் வியூகமும் என்போன்ற அமைச்சர்கள் யாவரும் கண்டு பயின்று கருத்துட்கொள்ளவேண்டியதாக வல்லவோ இருக்கிறது.

வெற் : அன்பு மிகுதியால் கூறுகிறீர்கள் அப்படி! எங்களது ஆற்றலும் அறிவின் நுணுக்கமும் பெருக்கமும் போர்க்களத்து நிகழ்ச்சிகளுக்குத் தான் பயன்படும். நாங்கள் அவ்விதம் போரிட்டு வென்று பெற்றுத் தரும் நாட்டைப் பொறுப்பேற்றுக் காத்துத் தரவல்ல அமைச்சர்களில்லையாயின் நாடு அழி வுறுவது எவ்வாருயினும், நாங்கள் அவதியை ஏற்பது திண்ணம். போர்க்களத்திலே எதிர்ப்படுவார்கள் போர் வீரர்கள். அவர்கள் வசம் எதிர்ப்புக்குத் துணையாயிருப்பது வில், வாள், வேல், தேர், யானை குதிரை இவைகள் தான். இவைகளை எதிர்க்கப் பயிற்சியும் ஆற்றலும் தளரா உள்ளமும் மட்டிலுமே இருந்தால் போதும். ஆனால் எந்தவித ஆயுதம் கொண்டும் தாக்காமல், ஆயுதங்களின் உதவியால் தடுக்கவும் இயலாமல் நேர்கின்ற மக்கள் மனப்போர், சாதிப்போர், இன்ன பிற ஏற்றத் தாழ்வுப் போர்களிருக்கின்றனவே அவற்றைத் தடுக்க ஆயுதந் தாங்கி அடலேறுகளெனப் போர் புரியும் எங்கள் வல்லமை போதாது. இந்தப்போரில் வெற்றி அல்லது வீழ்ச்சி. மக்கள் ஆற்றுகின்றபோரிலே இனத்தை இனம்,உறவை உறவு, தோழனைத் தோழன் எதிர் நிற்க வேண்டிவரும். அப்போது வாளால் வீழ்த்துவதா? வேல் கொண்டுகுத்துவதா? ஈட்டியால் பிழப்பதா? வில்லின் உதவிகொண்டு எதிர்ப்போரின் இதயத்திற்கு அம்பெய்வதா? எதைச் செய்ய இயலும்! பூசலுக்கும் பூசலுக்கும் எதிர்ப்புக்கும் எக்களிப்புக்கும், பகைமைக்கும் வஞ்சத்துக்கும் ஆட்பட்டு இதயத்தை அணுவணுவாகச் சிதைத்துக் கொண்டு இருந்தவகை இழந்து அழிந்தொழிய வேண்டியதுதான். ஆகையால் தான் குறிப்பிட்டேன், அமைச்சரின் ஆற்றல் அரசர்களின் வல்லமையைவிட அதிகம் மதிப்பிடத்தகுந்தது என்று.

அமை : ஆஹா! அமைச்சின் இலக்கணத்திற்கு அணுவளவும் குறைவின்றி விளக்கம் தந்து விட்டீர்கள்.

வீர : இத்தகைய பல விளக்கங்களின் இருப்பிடமான விவேகசிந்தாமணியை விண்மதி கொண்டோர் வெறுஞ் சொற்களுக்கிணங்கி வெளியேற்றியிருக்கின்றனர் கோரி நாட்டினர்.

அமை : ஆ! அப்படியா! ஆச்சரியத்திலும் ஆச்சரியம், பயிர் மழையை வெறுக்கலாம் வாழ்வோர் வையத்தை வெறுக்கலாம், வள்ளலை இரப்போர் வெறுக்கலாம் தன்னை-தன்வாழ்வை - தன் சூழுறவை வெறுத்திருக்கின்றனரே கோரி நாட்டினர்! என்னே அவர்களின் மடமை.

வெற் : அமைச்சரே! தாமும் ஆர்வமிகுதியால் ஆராயமறந்து விட்டீரே! சற்றுமுன் நான் கூறி வந்தவைகளுக்கு ஒரு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறேன். என் உடன் பிறந்தோர்களிலும் மிகுந்த அன்பு என்மீது காட்டக் கடமைப் பட்டவர்கள், என்கண்ணிற்படும் துரும்பு அவர்கள் நெஞ்சில் படும்வேலாக எண்ணவேண்டியவர்கள், நான் வளர அவர்கள் மகிழத்தக்கவர்கள் ஒருமிக்க நின்று 'போவெளியே' என்று கூறி நான் போகமறுத்தால் எதிர்த்து நின்று போரிட்டாவது வெளியே அனுப்புகின்ற அளவுக்குத் துணிவு கொண்டிருந்தனரென்றால் குறை அவர்களுடையதென்று எண்ணுகிறீர். ஒருபோது மில்லை! நான் அவர்களை நோகவில்லை அவர்கள் நிலைக்கு வருந்துகிறேன் - நாணுகிறேன். அத்தகு சூழ்நிலைக்கு என் நாட்டவரை, என் அன்புக்குப் பாத்திரமானவர்களை மாற்றியமைத்தவர்களின் திறமையைப்பாராட்டுகிறேன். எத்துணை தான் போரில் திறமும்வெற்றிபெருந்தன்மையும் பெற்றிருந்தாலும் தகுவன சிந்தித்துச் செயற்படுத்துந்தன்மையை என்னவர்களுக்கு உண்டாக்கிவைக்க வில்லையே என்று என்னையே நான் நொந்து கொள்கிறேன். எத்துணை முறைகளில் போரிலும் - வீரத்திலும் - வெற்றி கொள்வதிலும் சிறந்திருந்தாலும் மக்கள் மனப்போக்கைத் திருத்தியமைக்கும் திறமற்றுவிட்டகாரணத்தினாலல்லவா அவர்கள் இன்று பிறர்வாய்ச் சொல்லில் வழுக்கிவிழும் தன்மையராகி விட்டார்கள். எல்லா வளங்களும் பெற்ற அவர்கள், சிந்தனைச் செல்வத்தின் நிறைவைப் பெருததலைன்றே செயல் முறைகளின் தன்மையெண்ணுது போய்விட்டார்கள். அதை எண்ணி யெண்ணியே உள்ளம் உடைகிறேன் அமைச்சரே!

அமை : உண்மைதான் அறியாமைப் பகையை அகற்றுதவரை நாட்டில் அமைதியும் அருமையும் காணமுடியாது தான். நாட்டுப்பற்றுக் கெடும் வண்ணம் எடுத்தியம்ப இருந்தவர்கள் யார்? நாட்டினரே அத்தகைமையை யெய்தி விட்டனரா? அல்லது பிறநாட்டவரின் விடாமுயற்சியின் விளைவா?

வெற் : பிறநாட்டவர்தான்; வந்து தங்கினர். இங்குள்ளோர் வாழ்வின் மேன்மையும் மென்மையும் கண்டு மனம் புழுங்கினர். இவ்வாழ்வை நாம் பெறமாட்டோமா என்று ஏங்கினர். இப்போது தங்கள் எண்ணத்தின் வெற்றிகண்டு பொங்கி மகிழ்ந்து இருக்கின்றனர். நானிங்கு தனித்திருக்கின்றேன்.

அமை : தாங்கள் தனித்திருப்பதின் பயனால் எங்கள் கண்கள் விருந்து பெறுகின்றன. என்றாலும் இந்த விருந்தைவிட தங்கள் நாட்டிலிருந்து எங்களுடன் வந்து தங்கி வழங்கும் உறவு விருந்தே உள்ளம் மகிழ்விப்பதாகும். அதையே நான் விரும்புவேன்.

வீர : தக்கவர்கள் யாவரின் விருப்பமும் அதுவே ஆகும். எனினும் மதியைப் புறக்கணித்துத் தான்செய்வதின்ன வென மதிப்பிடாது செயலாற்றும் மந்த மதியினருக்கும் அவர் தமக்குத்துணைநிற்கும் மடைமையாளருக்கும் மதிகெடுக்க முனைந்து நிற்கும் குடிகேடருக்கும் தக்கதொரு புத்திமதி கொடுக்க வேண்டுவது நமது கடமையாகும். அதில் நாம் தவறுவது மடமையாகும். அதையெல்லாம் நன்கு உத்தேசித்துத்தான் போர்த் தூது அனுப்பி யிருக்கின்றேன். செய்திஇன்நேரம் போய்ச் சேர்ந்திருக்கும். புத்தியற்றவர்களின் நெஞ்சங்களில் ஒரு புதிரைக் கிளப்பியிருக்கும். பேலிகளுக்குக் கிலியை மூட்டியிருக்கும். அதன்பிறகு எண்ணிய எண்ணத்தின் விளைவைப் பெற ஒரு வாய்ப்பை அவர்களுக்கு ஏற்படுத்தும்.

வெற் : இப்படித்தான் அமைச்சரே என்னைக் கண்டது முதல் ஏதுமறியாதவர்களின் மீது சினங்கொண்டிருக்கிறான் வீரவர்மன்.

வீர : ஏதுமறியாதவர்கள் நாடுகடத்த மட்டும் அறிவார்களோ? எவர் சொல்லுக்கு முதன்மை தந்து முன்பின் சிந்திக்காமல் செயல் புரிந்தார்களோ அவர்களின் உதவியையே கொண்டு நம்மையும் எதிர்க்கட்டுமே. இதற்கு ஏன் நீர் வருந்துகிறீர். உமக்கும் அந்த நாட்டுக்கும் இனி என்ன உரிமை இருக்கிறது? யாரோ ஆளவேண்டிய தனி நாடாகி விட்டது அது! அங்கே எவரெவரோ கூடிக் கும்மாளமிடுவார்கள். இதுவரை வீரவர்மன் காத்திருந்தது வெற்றித் தோளர் அங்கே இருக்கிறரென்ற ஒரே காரணத்திற்காக. இப்போது அந்நிலை அகற்றப்பட்டு விட்டது. பின்னர் நானேன் கவலை கொள்ள வேண்டும் - தாமதிக்க வேண்டும்-பொறுமை கைக்கொள்ள வேண்டும். அந்த எண்ணத்தின் பேரிலேதான் போரறிவிப்புச் செய்திருக்கிறேன். போனவன் கொண்டுவரும் மறு மொழிக்காகக் காத்திருக்கிறேன். அதுமட்டுமல்ல வரும் செய்தி யாதாகத்தான் இருக்கக்கூடும் என்பதை நிர்ணயித்துப் போர்ப்படைகளையும் ஏற்பாடு செய்திருக்கிறேன்.

வீர : போர்ப்படையும் வேண்டுமா வீரவர்மா? உன்னுடன் அவர்கள் போரிட்டு மடிய

வேண்டுமென்றும் கருதுவார்களா? பிற நாட்டவர் தன்நாட்டில் இதுவரை படையெடுத்தறியாததின் காரணம் உணராதவர்களா அவர்கள். வெற்றித்தோளன் நாடு கடந்த காரணத்தால் நம்நாட்டில் படையெடுப்பும் நிகழ்கின்றதே என்ற ஒரு எண்ணம் போதாது? அவர்கள் உள்ளத்தை இடித்துப் பொடிக்க.

வீர: தாங்களவ்விதம் கருதுகிறீர்கள், அத்தகைய எண்ணங்களும் பண்புகளும் அவர்களின் இதயத்தை விட்டு எடுத்தெறியப்பட்டு விட்டன என்பதற்கொரு எடுத்துக்காட்டு இதோ நீங்கள் இங்கிருக்கிறீர்களே இது போதாது?

வெற்: எத்தனைதான் சொன்னாலும் என் நாட்டவர் பண்பு கெட்டவர்களாகமட்டும் போகமாட்டார்கள்.

வீர: தாம்தான் மெச்சிக்கொள்ள வேண்டும். பண்பைப் புதை குழியின் அடித்தளத்திலே வைத்துமூடி அதன்மேல் நின்றுகொண்டு தானே வெற்றித் தோளனே வெளியேறு என்று கூவியிருக்கிறார்கள். வாழ்வை வளர்த்தவனை வாய்கூசாது வெளியேறு என்று கூறுகின்றபோது எங்கே பண்பு. நாடுகடந்து செல்லும்போது கல்லாகச் சமைந்திருக்கின்ற அளவுக்கு மனத்தை மாற்றிக் கொண்டவர்களிடம் ஏது பண்பு. சென்றவர் செத்தாராக இருக்கிறார் என்று இதுவரை எல்லைக் கோடுவரை கூடவந்து தேடியவர்கள் கொண்டிருப்பதன் செயல் முறைக்குப் பெயர் பண்பா? இவற்றையெல்லாம் பற்றி ஏன் வீண் குழப்பம். நடப்பவற்றை எதிர்கொள்ள நானிருக்கிறேன். இதோ உங்களுக்குத் துணையாக அமைச்சரும் தளபதியும் இருக்கின்றனர். ஓய்வுற் றிரும்.

(எல்லோரும் சென்றபின் வெற்றித் தோளன் ஒருபுறம் தனியாக ஒதுங்கி நின்று கோரி நாட்டின் திசை நோக்கிப் பார்த்தவண்ணம்)

வெற்: என் அருமை நாடே! உன் நிலை இவ்வாறாகவா குலையவேண்டும். பிறர் கண்டு அஞ்சுகின்ற அளவு சிறப்புற்றுத் திகழ்ந்தாய்-இன்று எவரும் கண்டு எள்ளி நகையாடத்தகுந்த அளவுக்கு இழிந்து விட்டாய். எல்லா நாட்டவரும் "ஏது கோரி நாட்டுக்கு ஈடு" என்று கூறிப்பாராட்டினர் உன்னை. இப்போதோ கோரி நாட்டிற்கு எவ்வாறே வந்துற்றதே கேடு என்றும் இத்தகைய நிலைக்கு நாட்டை இழுத்துச் சென்று விட்டனரே என்று பழிக்கவும் இடமாய் விட்டாய். எப்போதும் எதற்காகவும் கள்ளம் கபடம் என்பதையே அறியாது செயல் முறைகள் யாவும் அங்கையில் திகழும் நறுங்கனியென ஒளிவு மறைவின்றி ஒய்யாரத்துடன் வாழ்ந்தாய். இன்றைக்கு எதையும் மறைத்து ஒருவருக்கொருவர் யார் பகை, எவர் உறவு என்று உணர்ந்துகொள்ள முடியாத அளவுக்கு உள்ளத்திலே பூசலும் மோசடிக்கருத்தும் கொண்டவர்கள் சூழ தங்களைத் தாங்களே நம்பிக்கை கொள்ள முடியாத அளவுக்குச் சென்றுவிட்டாயே! காண்பதெல்லாம் இன்பக்காட்சி, கருத்தெல்லாம் மகிழ்ச்சிப்பூங்கா, நாட்டமெல்லாம் நலம் செய் தேட்டம் என்பது போய்-கண்ணிற்படுவன வஞ்சமும்-சூதும், கருத்திலெல்லாம் அலேவும், அழிவும் நாட்டமெல்லாம் கவரல்மீது என்ற தன்மையை விரும்பி ஏற்றவர்கள் உலவுங் காடாய்விட்டதே கோரிநாடு. இனி அமைதி நிலவுமா? அன்பு திகழுமா? அறம் நிலைக்குமா? எவ்வாறு நிலைக்கும்? நிலைக்கத்தான் வகையேது-வழியாது? படையின்றிப் போரின்றி படுகளங்கள் அமைக்காது பார்வையிலும் பழக்கத்திலும் பேச்சிலும் பிதற்றலிலுமே உங்களை-உங்கள் பிணைப்பைப் பிரித்துவிட்டார்களே-இனி உங்கள் பிரிவு இணையுமா? தகரப்புத் தணியுமா? தடுமாற்றம் நேராகுமா? ஒருபோதும் ஆகாது ஆக்கமென்பதே இனி உங்கள் பகையாக்கம்தான். அழிவுதான் உங்களை அணுகி வந்து கொண்டேயிருக்கும். அதை இப்போது தான் - வீரவர்மனின் தூதுவனைச் சந்திக்கின்றபோதுதான் உணருவீர்கள். என்றாலும் என்ன பயன்? எண்ணத்தாலும் ஏக்கத்தாலும். துடித்தாலும் துவண்டாலும் பயன் கிடைக்க முடியாது.

(என்று பெருமூச்செறிந்து செல்கிறான்)

(தொடரும்)

★



# உள்ளம் பறித்த உரவோன்

(எழினி)

★

தோழி: வெயில் தாழ்ந்து விட்டது; குளிர்ந்த தென்றல் வீசும் மாலைப் பொழுது வந்துள்ளது. ஏடி! மலைச் சாரல் சென்று வருவோம், வருகிறாயா?

தலைவி: மலைச்சாரல் சென்று திரும்பி நீண்ட நாட்களாகி விட்டன அல்லவா! எனக்கும் அங்குபோய் வரவேண்டும் போல்தான் தோன்றுகிறது!

தோழி: மலைச்சாரலிலுள்ள பூச்செடிகளில், பூக்கள் பூத்துக், காடு கமழக் குலுங்கிக் கொண்டிருக்கிறதாம். வேங்கை மரமும் பூத்து விட்டதாம். அதன் பூக்கள் கொத்துக் கொத்தாக அசைந்தாடிக் கொண்டிருக்கின்றன வென்று ஊரார் கூறுகிறார்கள் ஆகவே, நாம் இன்று அங்குசென்றால், வேங்கைப்பூ பறித்துக் கொண்டு வரலாம்!

தலைவி: நாம் வேங்கைப் பூக்கள் கொய்து பல திங்கள் கழிந்து விட்டன, ஆகையால்! நீ கூறுவதுபோல் இன்று கூடை நிரம்ப வேங்கைப் பூ பறிக்கலாம்! இல்லையா......? தாய்க்குத் தெரியாமல் ஓடிப்போவோம்! வா!

தோழி: சற்று இரு! நான் புழக்கடையிற் சென்று பூக்கூடையை எடுத்துக்கொண்டு ஓடி வந்துவிடுகிறேன்!

(தோழி, தலைவி இருவரும் பூக்கூடை ஏந்தி மலைச்சாரல் செல்கின்றனர்.)

தலைவி: காட்டை அணுகும்போதே மகிழம் பூவின் மணம் மூக்கைத் துளைக்கிறதே......!

தோழி: அதோ முல்லைக்கொடிகளைப் பார். முல்லைப் பூக்கள் நம்மைப் பார்த்துக் குலுக்கென்று சிரித்து, வா என்று அழைப்பது போல் அசைந்தாடுவது எவ்வளவு அழகாக இருக்கிறது பார்த்தாயா......!

தலைவி: ஏடி தோழி! என்னடி...! சந்தனப் புகை அக்குடிசையின் பக்கத்திலிருந்து வருகிறது.

தோழி: அதுவா...! அக்குடிசையில் வாழும் மலைக் குறவமக்கள் காட்டிலுள்ள சந்தன மரத்தை வெட்டி, அதனை அடுப்பு விறகாகப் பயன் படுத்துகிறார்கள். அதனால் எழும் புகை தான் நம்மைச் சூழ்ந்து காணப்படுவது.

தலைவி: முதலில் மல்லிகை மலரைப் பறிப்போம்! வா!

(இருவரும் மல்லிகைச் செடியிலிருந்து மலர்களைப் பறித்துக் கூடையில் சேர்க்கிறார்கள்.)

தோழி: பொழுது போவதற்குமுன் வேங்கைப் பூ பறிக்கப் போகவேண்டாமா? இங்கேயே காலங்கடத்திவிட்டால்......!

தலைவி: ஆமாடி! வா விரைவாகப் போவோம்! இல்லாவிட்டால் அன்னை கோபிப்பாள். அந்திநேரம் வந்துவிட்டது வா, வா...!

(தலைவி தோழி இருவரும் வேங்கை மரத்தை அடைகிறார்கள்.)

தோழி: எவ்வளவு அழகான பூக்கள். ஆகா! இதனை நம் தலையில் அன்னை வைத்து முடித்து எவ்வளவு நாட்கள் ஆகிவிட்டன! இந்த மரத்தில் பூத்திருக்கும் பூக்கள் புலியின் தோற்றத்தை நினைவு படுத்துகிறதல்லவா?

தலைவி: அதனால்தான் இதற்கு வேங்கை என்று பெயரிட்டிருக்கிறார்கள். இதனைப் பாயாவேங்கை என்று குறிப்பிடுவதை நீ கேட்டதில்லையா...?

தோழி: ஆமாம்! இவ்வளவு உயரத்தில் இருக்கிறதே பூ, அதனை எப்படி நாம் பறிப்பது!

தலைவி: 'புலி புலி' என்று கூவினால் கிளை தாழ்ந்து கொடுக்கும் என்று கூறிடுவார்களே அப்படிக் கூவினால்தான் அது தாழ்ந்து கொடுக்கும்.

தோழி: அப்படியானால் நீ கூவு. கிளை தாழ்ந்ததும் நான் மலர்களைப் பறிக்கிறேன்!

தலைவி : முதலில் நீ கூவு! பிறகு நான் கூவுகிறேன். இருவரும் சேர்ந்து பூக்களைப் பிறகு பறிப்போம்!

தோழி : இருவரும் சேர்ந்து கூவுவோம். அப்பொழுதுதான் கிளை விரைவாகத் தாழ்ந்து கொடுக்கும். உம்...! கூவு......!

(இருவரும் சேர்ந்து 'புலி புலி' என்று கூவுகிறார்கள். வில்லும், அம்பும் ஏந்திய வீரன் ஒருவன் வேட்டையாடும் பொருட்டு மலைச்சாரலில்சுற்றிக்கொண்டிருக்கிறான். 'புலி புலி' என்ற ஒலி புதர்களை அடுத்த வேங்கை மரத்தின் அடியிலிருந்து வருவதைக் கேட்டு, அவ்விடம், விரைந்தோடி வருகிறான். இரு பெண்கள் கைகளைத் தட்டிக் கொண்டு 'புலி புலி' என்று கூவி குதித்துக்கொண்டிருக்கும் காட்சியைக் காணுகிறான்.)

தோழி : (பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டு) ஏடி! அதோ யாரோ வருகிறார்போல் தெரிகிறதடி. ஏடி! ஓசை செய்யாதே! திரும்பிப் பார்! அதோ! அதோ பார்!

(தலைவி திரும்பிப் பார்க்கிறாள். வீரன் ஒருவன் புதரின்மீதுள்ள செடிகளை விலக்கிக்கொண்டு, மெதுவாக முன்னேறுகிறான். 'புலி' என்ற ஒலிகேட்டு வந்த அவனுடைய விரைவு வரவைத் தணிகிறது.)

வீரன் : (அருகில் வந்து நின்று, மகளிரை நோக்கி) நீவிர் கண்டு அஞ்சிய அவ் வெம்புலி எப்பக்கம் சென்றது. கூறுங்கள்! இப்பொழுதே சென்று கொன்றுபோடுகிறேன்!

(மகளிருவரும் நாணமுற்று, ஒருவர்பின்னால் ஒருவர் மறைய முயன்று, ஒருவரை யொருவர் கட்டிப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள்.)

வீரன் : (மறுமொழிகாணாது) ஏன் ஒன்றும் கூற மறுக்கிறீர்கள். சொல்லுங்கள்! அப் புலியைக் கண்டதுண்டமாக்கிப் போடுகிறேன்; என் கையிலேந்தியுள்ள இவ்வம்புக்கு இரையாகாத விலங்கு எதுவும் இருக்கமுடியாது. இதன் பிடியில் தப்பியோடிய விலங்கு ஒன்று கூட கிடையாது!

இருவரும் வாய்திறக்கவில்லை.

வீரன் : மடவீரே! ஏன் மாற்றம் கூற மனந் தயங்குகிறீர்கள்! அஞ்சாமல் கூறுங்கள்!

(மாற்றம் பிறக்கவில்லை)

வீரன் : புலியைக் கண்டு அஞ்சிய தாங்கள் அதனின்றும் விடுவிக்க வந்த என்னைக் கண்டு அஞ்சுவானேன். என்னைக் கண்டு தங்களுக்கு அச்சம் தோன்றக்கூடாதே! அன்பு அல்லவா தோன்ற வேண்டும்.

(இதற்கும் மறுமொழி எதுவும் வரவில்லை.)

வீரன் : மடவீரே! நான் இவ்வளவு கெஞ்சிக் கேட்டும் பதில் கூறாததேனோ? நீங்கள் எப்பொழுதும் பொய் கூறும் பழக்கமுடையவர்களோ? உண்மை ஒருபொழுதும் உங்கள் வாயில் பிறக்காதோ? நீங்கள் ஊமையர்களா? புலி, புலி என்று எப்படி கத்தினீர்கள்?

(அவர்களுடைய அழகிய நெற்றியின் மீதும், கருமையான கூந்தல் மீதும், அவன் உள்ளம் பறிபோகிறது. அம்மகளிர் அவ்வளவு நேரமாகியும் அன்புரை எதுவும் கூறாதது, அவ்வீரனுக்கு அன்பின் பாற்பட்ட வெறுப்பைக் கொடுக்கிறது.)

வீரன் : ஆக, என் உதவி உங்களுக்கு வேண்டுவதில்லை போலும்! ஆயின் நான்! செல்கிறேன. வரும் இடர்களை ஏற்று நில்லுங்கள்.

(என்று கூறவிட்டு நகர்கிறான்.)

(வீரன் எதிரில் நிற்கும்போது, தலைவியும் தோழியும், மொண மொணவென்று தங்களுக்குள் ஏதோ மெதுவாகப் பேசிக்கொண்டு நாணச் சிரிப்பு சிரித்தார்கள். வீரன் தன்னுடைய அம்பினைக் கையில் பிடித்து அதன் தன்மையை ஆராய்ந்து கொண்டிருக்கும் போதெல்லாம், தலைவி வீரனைக்கண்டு அவன் அழகைத் தன்னிரு விழியாலும் பருகிக் கொண்டிருந்தாள். வீரன் பேசும்போது, தலைகுனிந்து தலைவியைப் பார்த்து, அவள் வனப்பைத் தன் கண்களால் கவ்வினான். வீரன் தன்னைக் காணும்போதெல்லாம் தலைவி நாணி ஒடுங்கி தோழியின் உடலுக்குள் தன்னுடலை மறைக்கத் தலைப்பட்டாள். அப்பெண்களிடத்திலிருந்து மறுமொழி வராது போகவே, வீரன் தலைவியைக் கடைசியாக ஒருமுறை முறைத்துப் பார்த்துவிட்டு, மெதுவாகத் திரும்பிச்சென்று புதருக்கருகில் நிறுத்திவைத்திருந்த தேரை அணுகினான்.)





தேரின் மீது ஏறி நின்று, மீண்டும் ஒரு முறை தலைவியைக் கடைக்கண்ணால் பார்த்துவிட்டு, குதிரைகளை முடுக்கினான். அவன் சென்று மறையும்வரையில் தலைவி கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்து விட்டு தோழியிடம் திரும்புகிறாள்.)

தலைவி : யாரடி அவர் அவ்வளவு அன்பாக நம்மிடத்தில் இவ்வளவு நேரம் பேசிக்கொண்டிருந்தது! நான் முன்னர் பார்த்ததே இல்லையே!

தோழி : நான்தான் எப்படிப் பார்த்திருக்க முடியும்!

தலைவி : ஏனடி! அவர் அவ்வளவு கேட்டாரே, ஏன் ஒன்றுக்குக்கூட நீ பதில் கூறவில்லை!

தோழி : என்னைப் பார்த்தா கேட்டார். உன்னைப் பார்த்துக் கொண்டே தானே கேட்டார்!

தலைவி : பொதுவாகத்தானேடி கேட்டார்! நீ பதில் சொல்லக்கூடாதா? எனக்கு என்னமோ போல் போய் விட்டது......பதில் கூறுவோம் என்று நினைத்தேன். நாக்கு தழுதழுத்தது. ஆகையால் நாணி ஒடுங்கிவிட்டேன்.

தோழி ; என்னைப் பார்த்துக்கேட்டிருந்தால் நான் மறுமொழி பகர்ந்திருப்பேன். உன்னையே பார்த்துக்கொண்டு கேட்கும்போது மறுமொழி கூறும் உரிமை உனக்குத்தானேயடி உண்டு! என்னமோ அவர் அழகிலே நீ கவிழ்ந்து விட்டாய் போலும்! அதனால்தான் நீ வாய் மூடிக்கொண்டிருந்து விட்டாய்! நீதான் கண்ணினாலே பேசிக் கொண்டிருந்தாயே! நான் எதற்கு பதில் கூறவேண்டும்.

தலைவி : இப்படித்தான் நீ அடிக்கடி கேலி பேசி என்னை வருத்துகிறாய். இதுதான் உன் வழக்கமாகப் போய் விட்டதே!

தோழி : போடி : போ! பார்த்தவுடனேயே என்னமோ போல் ஆய்விட்டது என்று கூறினாயே அதன் பொருள் என்னவாம்......!

தோழி : இன்னும் அப்படித்தானே பேசுகிறாய்! ஏளனம் செய்துகொண்டிருப்பதில் உனக்கென்ன மகிழ்ச்சியோ! உன்னோடு நான் பேசுவதே பிசகு ; வா வீட்டிற்குப் போவோம் காலந்தாழ்ந்துவிட்டது! விரைவாக வா...... இல்லையானால் என்ன வைவார்கள்!

தோ : காலங்கழிந்தது இப்பொழுதுதான் புலப்பட்டதோ......! இதுவரைக்கும் ஏனோ புலப்படவில்லை...

(என்று கூறி சிறித்துக்கொண்டே தலைவியின் தோளில் கை சேர்த்து வீட்டிற்கு விரைவுபட திரும்புகிறாள்)

தலைவி மலர் பறிக்கப் போய் வீரனின் மனம் பறித்துக்கொண்டு, அதனைத் தாங்க முடியாமல் தாங்கிக்கொண்டு, தள்ளாடித் தள்ளாடி வீடுவந்து சேர்கிறாள்.

இரவு வந்ததும் நிலவு காய்வதற்காக இருவரும் நிலாமுற்றம் சேர்கிறார்கள்.

தலைவி : ஏடி தோழி! நாம் காட்டில் கண்டோமே அவர் எங்கடி போயிருப்பார்...

தோழி! (அலுத்தவள் போல்) அவர் எங்கு போயிருப்பாரோ எனக்குத் தெரியாது.

தலைவி : அவர் தலையில் சூடியிருந்தாரே வெட்சிப் பூவாலாய மாலை, அது பார்ப்பதற்கு எவ்வளவு அழகாக இருக்கிறது?

தோழி : அதுமட்டும்தானா நீ பார்த்தாய்! அவர்தோளில் கிடந்து அசைந்தாடிக்கொண்டிருந்ததே, அது எந்த மலரினால் செய்தது தெரியுமா? அதுதான் செங்கழு நீர்ப்பூக்களை ஒன்றன்பின் ஒன்றாக ஊசியாற் கோர்த்துக் கட்டப்பட்ட மாலை! அதனால்தான் அது அத்துணை அழகாகக் காணப்பட்டது.

தலைவி : அவர் கையில் வில்லும், கணையும் ஏந்தியிருந்தாரே...அவற்றை ஏன் அவர் சுமந்திருக்க வேண்டும்?

தோழி : இவ்வளவு தெரிந்த உனக்கு அது தெரியவில்லையா? அவர்தானடி வேட்டையாடும் வீரர். தன் கணைக்குத் தப்பியோடும் மான் எதுவும் கிடையாதென்று அவர் அப்பொழுதே கூறவில்லையா. அதனால்தான் நன்றாக வரிந்து கட்டப்பட்ட வலிய வில்லினை இடத்தோளில் தழுவி நின்றார்.

தலைவி : ஆகா! அவர் மார்பில் பூசியிருந்த சந்தனம் சிறந்த மணத்தை மட்டுமல்ல, எவ்வளவு அழகைக் கொடுத்தது பார்! என் உள்ளம் அவர் மார்பின் அழகிலேயே படிந்துவிட்டதடி!

தோழி: அது அழகாகமட்டுந்தானு இருந்தது...உன் மார்பு சென்று பாய்வதற்குறிய அவ்வளவு வலியுடையதாகவுந்தான் இருந்தது.

தலைவி: கேலி செய்ய ஆரம்பித்துவிட்டாயா! எனக்குத் தூக்கம் வருகிறது. நான் போகிறேன்!

தோழி: தூக்கம் வருகிறதா......அப்படியாஞல் போய்த் தூங்கம்மா, தூங்கு...!(தோழி சிரிக்கிருள்)

(பிறகு இருவரும் அவரவர் இருப்பிடம் சென்ருர்கள். ஒருநாள் இடையில் கழிய, அடுத்து வந்த காலைப் போதில் தலைவியை வளர்த்து வந்த செவிலித் தாய் தோழியைக் காணுகிருள். செவிலித் தாயையும் அன்னை என்று கூறுவது வழக்கம்.)

செவிலித்தாய்: ஏடி! என் மகளுக்கு என்ன நேர்ந்தது. உனக்கு ஏதாவது தெரியுமா?

தோழி: எனக்கு ஒன்றுந் தெரியாதே! என்ன செய்கிறது அவள் உடலுக்கு.

தாய்: அவள் சோர்ந்து சோர்ந்து வருகிருள். பாற் சோறு ஊட்டிப் பார்த்தேன். ஒரு நெல்லிக்காய் அளவுகூட உள்ளிறங்கவில்லை. அவளது அழகு நிறம் மங்கி, உடல் முழுதும் பசலை நிறம் படர்ந்திருக்கிறது.

தோழி: நேற்று நன்ருகத்தானே இருந்தாள். நேற்றுக்காலையில் நாங்கள் சிரித்து விளையாடிக் கொண்டிருந்தோம்!

தாய்: நேற்று மாலையிலிருந்துதான் இந்த வேறுபாடுகளெல்லாம் காணப்படுகிறது.

தோழி: என்ன காரண மென்று எனக்கு ஒன்றுந் தோன்றவில்லையே!

தாய்: ஏதாவது அச்ச முறுத்தும் பொருளைக் கண்டு அஞ்சினுளோ? அல்லது தீராத பிணி வந்து மூண்டுவிட்டதோ? (என்று சொல்லி செவிலித்தாய் ஏங்குகிருள்.)

(தோழி, தலைவியின் இருப்பிடம் சென்று படுக்கையிலிருக்கும் அவளைத் தொட்டுப் பார்த்தறிவது போல் பார்த்து விட்டு, செவிலித் தாயருகில் வருகிருள்.)

தாய்: எப்படியிருக்கிறது பார்த்தாயா?

தோழி: ஒரு மாதிரியாகத்தான் காணப்படுகிருள்...!

தாய்: நேற்றைக்கு முன்ஞள் மாலை எங்கு இருவரும் சென்றிருந்தீர்கள்! நீங்கள் இருவரும் இங்கு காணப்படவில்லையே!

தோழி: அதுவா...மலைச்சாரலுக்கு வேங்கைப் பூ பறிக்கப் போயிருந்தோம்!

தாய்: அங்கு ஏதாவது புலி, யானை போன்ற கொடிய விலங்குகளைக் கண்டு ஒருக்கால் அஞ்சினுளோ?

தோழி: விலங்கு எதையும் நாங்கள் காணவில்லை; ஆடவர் ஒருவரை மட்டுந்தான் கண்டோம்!

தாய்: அச்ச மூட்டும் தோற்றங்கொண்ட கொடியவஞக அவன் காணப்பட்டானே?

தோழி: இல்லை...அப்படி ஒன்றும் இல்லை! வேங்கைப்பூ உயர்ந்தகிளையில்பூத்திருந்ததால், அது தாழும் பொருட்டு 'புலி, புலி' என்று கூவினேம். கிளை தாழவில்லை. ஆனல் அழகும், வலிமையும் ஒருங்கே அமையப் பெற்ற வீரர் ஒருவர் எங்கள் எதிரில் விரைந்தோடி வந்து, 'புலி, எப்பங்கஞ் சென்றது, காட்டுங்கள்; இப்பொழுதே கொன்றுபோடுகிறேன்' என்று கூறினர். நாங்கள் அவர் அறியாமையைக் கண்டு மனதிற்குள் எண்ணி எங்களுக்குள்ளாக புன்சிரிப்பு சிரித்துக்கொண்டிருந்தோம். நாங்கள் நாணி, மாற்றங்கூறுது நிற்கவே; அவர் பலமுறை நின் மகளின் அழகிய கண்களை உற்றுப் பார்த்துக் கொண்டே நின்ருர். அவர் மீண்டும் மீண்டும் வினவ, நாங்கள் மறுமொழி ஏதும் கூறவில்லை. பிறகு அவர் தேரின் மீது ஏறி, ஞாயிறுமறையும் பொழுதில் அவரும் சென்று மறைந்தார். தலைவி, அவர் தன் உள்ளத்தைப் பறித்துக் கொண்டுபோய் விட்டதாகக் கூறினுள். அவள் 'உள்ளம் பறித்த உரவோன்' அவர் என்பதைக் கண்டேன்! பின் நாங்கள் வீட்டிற்குத் திரும்பிவிட்டோம்!

தாய்: ஆகவே அவள் உடல்வேறு பாட்டிற்கு அவன்தான் காரணம் என்கிருயா?

தோழி: ஆராய்ந்து அறியும் அறிவுடையோர்கள், அதன் பொருளை நன்கு உணர்ந்து கொள்வார்கள். தாயே! தாங்களும் அதன் பொருளை உணர்ந்து, அதன் வழி நடந்து கொள்வீர்களாக! (என்று கூறிவிட்டுத் தோழி ஓடி விடுகிருள்.)



அன்னுய் வாழிவேண் டன்னை நின்மகள்
பாலும் உண்ணுள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனளென வினவுதி அதன்றிறம்
யானுந் தெற்றென உணரேன் மேனுள்
மலிபூஞ் சாரலென் தோழி மாரோ
டொலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்
புலி புலி என்னும் பூசல் தோன்ற
ஒண்செங் கழுநீர்க் கண்போல் ஆயிதழ்
ஊசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கஞ் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயமண் டாகஞ்செஞ் சாந்து நீவி
வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்து கொண்டு
யாதோ மற்றம் மாதிறம் படரென
வினவி நிற்றந் தோனே அவற்கண்டு
எம்முள் எம்முள் மெய்ம்மறை பொடுங்கி
நாணி நின்றென மாகப் பேணி
ஐவகை வகுத்த கூந்தல் ஆய்நுதல்
மையீர் ஓதி மடவீர் நும்வாய்ப்
பொய்யும் உளவோ என்றனன் பையெனப்
பரிமுடுகு தவிர்த்த தேரன் எதிர்மறுத்து
நின்மகள் உண்கண் பன்மாண் நோக்கிச்
சென்ருேன் மன்ற அக்குன்று கிழவோனே
பகல்மாய் அந்திப் படுசுடர் அமையத்
தவன்மறை தேம் நோக்கி மற்றிவன்
மகனே தோழி என்றனள்
அதனள வுண்டுகோள் மதி வல்லோர்க்கே.

இது தங்கால் முடக் கொற்றனுர் என்ற சங்க காலப் புலவரின் உள்ளத்தில் வடிவெடுத்த கற்பனை ஓவியம். இப்புலவரின் இயற்பெயர் கொற்றனுர் என்றிருந்திருக்கலாம். வேறு கொற்றனுர்களிலிருந்து இவரை வேறு பிரித்துக்காட்ட, இவர் கால் முடமாகிக் கிடந்தது கொண்டு, அதனையே குறிப்பிட்டுணர்த்தும் தன்மையில், தங்கால் முடக் கொற்றனுர் என்ற பெயர் பிற்பாடு கொடுக்கப்பட்டிருந்திருக்கலாம். இவரது இந்தச் சொல்லோவியம் அகநானூறு 48-ம் பாடலாகத் தொகுக்கப்பட்டிருக்கிறது.

'செவிலித் தாய்க்குத் தோழி அறத்தொடு நின்றது' என்ற அகப்பொருள் துறையின் பாற்பட்டதாக இச்செய்யுள் புலவரால் புனையப்பட்டிருக்கிறது. அதாவது தலைவி ஒரு ஆண் மகனேடு காதல்கொண்டு, அவனை மணக்க விரும்பி யிருக்கும் குறிப்பைத், தோழி செவிலித்தாய்க்குத் திறம்பட உணர்த்தி, தலைவியின் கருத்தை நிறைவேற்றி வைக்கும்படித் தூண்டுவதாகும். செவிலித்தாய் செய்தியையறிந்து தலைவியின் தாய்க்கு அறிவிப்பாள். தாய் ஏனையோர்க்கு உணர்த்த மணம் நடந்தேறும் என்பது அக்கால மக்கள் கொண்டிருந்த மரபாகும். இது பண்டைத் தமிழ் மக்களது நாகரீக வளர்ச்சியையும், காதல் மேம்பாட்டையும் விளக்குகிறது.

# ★ பண்டை விளையாட்டுகள் ★

பேராசிரியர் வித்வான் கோ. சுப்பிரமணிய பிள்ளை; எம்.ஏ., பி.எல்.

உலகக் கவலை, கையாறு; அழுங்கல் களிற் சிக்குண்டு, நாளும் ஓடியோடி உழைத்து இளைத்துச் சலிக்கின்ற மக்களுக்கு, அவற்றி னின்றும் விடுதலை பெறுவதற்கு விளையாட்டுகள் இன்றியமையாதனவாகும். உடலைக்கட்டுடன் காப்பதற்கும், அறிவைத் தெளிவு பெறச் செம்மை செய்வதற்கும், மனவமைதி பெறுதற்கும், மகிழ்ச்சியடைவதற்கும் விளையாட்டுகள் பெரிதும் துணை புரிகின்றன. விளையாட்டுகளைப் பச்சிளங் குழந்தைகள் முதல் பழுத்துப் பல்விழுந்த கிழவர்கள்வரை விரும்புகின்றனர். உலக மக்கள் அனைவரும் அவாவி நிற்கும் விளையாட்டுகள் ஒவ்வொரு நாட்டிலும் வெவ்வேறு முறையில் அமைந்திருக்கும். ஒரு நாட்டின் இயற்கைச் சூழல்களுக்கும் வெப்ப தட்பங்களுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் தக்கவாறு விளையாட்டுகளும் அமையும். ஒரு நாட்டு மக்களின் நாகரிகத்தையும் சிரிய பண்பாடுகளையும் அறிவதற்கு, அவர்கள் பழக்கத்திற் கொண்டுள்ள விளையாட்டுகள் பெருஞ் சான்று பகர்வனவாகும்.

தமிழ் மக்களின் பண்டைய விளையாட்டுகள் பல இன்னும் வழக்கத்திலிருந்து வருகின்றன. ஒரு சில வழக்கொழிந்தும் போயின. சங்க இலக்கியப் பாடல்கள் பலவற்றில் பல விளையாடல்களைப் பற்றிய குறிப்புகள் நமக்குக் கிடைக்கின்றன. ஆனால், அந்த விளையாட்டு முறைகளிற் சில நம்மால் உணர்ந்து கொள்ள முடியாதிருப்பது வருந்தத்தக்கதாகும்.

இக் காலத்தில் நாம் அழும் குழந்தைக்குக் கிலுக்குகளைக் கிலுக்கி ஒலியெழச் செய்து விளையாட்டுக்காட்டி அவர்களைச் சிரிக்கச் செய்கிறோம். கிலுக்கின் ஒலியிலே குழந்தையின் கருத்துக் கவரப்பட்டு, அது தன் நோயையும் கவலையையும் மறந்து விடுகிறது. கிலுக்கின் காட்சியிலும் ஒலியிலும் அதன் எண்ணம் செல்லத் தொடங்குகிறது. அதனால் குழந்தை பெரிதும் ஆறுதல் அடைகின்றது.

சிறுபாணாற்றுப்படையிலே ஒரு சிறு காட்சியைப் புலவர்நமக்குக் காட்டுகிறார். தென் பாண்டி வளநாட்டின் கொற்கை மாநகரிலே உப்பு வணிகர் தங்கள் குழந்தைகளைச் செல் வமாய் வளர்த்தது போல் குரங்குகளையு வளர்த்து வந்தனர். குரங்குகளும் குழந்தை களும் கூடிக் கலந்துவிளையாடின; கையிலே கிலு கிலுப்பைகளை வைத்து விளையாடின சொற்கை முத்துக்குப் பேர்பெற்ற கடற்கரை பட்டினம் அல்லவா? அதனால், கிளிஞ்சிலின் உள்ளே உயர்ந்த முத்துக்களைப் போட் அடைத்துச்செய்த கிலுகிலுப்பைகளைக் கை யிற்கொண்டு குழந்தைகளும் குரங்குகளு விளையாடினவாம்;

" நோன்பகட் டுமணர் ஒழுகையொடு வந்த  
மகாஅ ரன்ன மந்தி மடவோர்  
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்  
வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித்  
தோள்புற மறைக்கு நல்கூர் நுசுப்பின்  
உளரிய லைம்பா லுமட்டிய ரீன்ற  
கிளர்பூட் புதல்வரொடு கிலு கிலி யாடும்  
தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான் "

விலை குறைந்த மலிந்த பண்டமாயுள்ள எளி உப்பை ஊர் ஊர் தோறும் வண்டியில் ஏற்றி சென்று விற்று வயிறு பிழைக்கும் உமண கள் தங்கள் குழந்தைகளுக்கு விளையாட்டுக எவ்வாறு அமைத்துக் கொடுத்தனர் எ பதை இவ்வடிகள் நமக்கு நன்கு எடுத்து கூறுகின்றன. அவர்களின் குழந்தைகள் ஒ விடும் அணிகளைப் பூண்டிருந்தனர். அவ களுக்கு விளையாட்டுக் காட்டுவதற்கு என் பெண் குரங்குகளையும் கூட வளர்த்தன குரங்குகளையும் குழந்தைகளைப் போல் அ பாய் வளர்த்தனர்; அவர்கள் விளையாட வி யுயர்ந்த முத்துக்களைச் சிப்பியில் அடைத் அழகான கிலுக்குகள் செய்து கொடுத்தன என்பவற்றையெல்லாம் நாம் படிக்கும்பொழு அவர்கள் செல்வத்தின் செழிப்பையும், சி குழந்தைகளின் விளையாட்டுகளை எவ்வள முக்கியமாய் அவர்கள் கருதினர் என்பதையு நாம் நன்கு தெரிகிறோம்.



Filmed as bound.

இரவில் குழந்தைகள் அழுதால் நாம் இன்றும் அம்புலியை அழைத்து விளையாட்டுக் காட்டுகிறோம். தண்மதியின் நல்லொளியைக் கண்டதும் குழந்தைகள் அழுகையை மறந்து அளவிலா மகிழ்ச்சி அடைகின்றன. குழந்தையை இடுப்பிலே எடுத்துக்கொண்டு தாய்மார் அம்புலியையாட அழைத்துக் கொண்டே பாலுணவை ஊட்டுவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். இதனை அம்புலியாடல் என்பர்.

" புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்  
நீர்குடி சுவையில் தீவிய மிழற்றி  
முகிழ்நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்  
பொன்னுடைத் தாலி யென்மகன் ஒற்றி  
வருகுவை யாயின் தருகுவென் பாலென  
விலங்கமர்க் கண்ணன் விரல்விளி பயிற்றித்  
திதலை யல்குலெங் காதலி  
புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே "  
(அகம்—54)

தலை நரைத்துத் தோல் திரைத்த தொண்டு கிழவர்கள் ஊர்ப்பொது அம்பலங்களிலே கூடியிருந்து பொழுது போக்காக நாய்கள் என்னும் வல்லுக்காய்களை வைத்துச் சூதாடிக் கழிப்பார்களாம்:

"......பொதியில்  
நரைமூதாளர் நாயிடக் குழிந்த  
வல்லின் நல்லகம் . . .  
(புறம்—52)

அதோ ஒரு காட்சி! அந்த மன்றத்திலே பாருங்கள், நரைத்து ஆடி நடுங்கும் தலையையுடைய கிழவர்கள், மிக்கு ஆழ்ந்த சிந்தனையோடு வல்லுகளை அங்கும் இங்கும் நகட்டி, மனத்திலே சூழ்ந்து விளையாடுகின்ற ஆட்டத்தை:

" . . . . . மன்றத்து,  
நரைமூ தாளர் அதிர்தலை யிறக்கிக்  
கவைமனத் திருத்தும் வல்லு''  
(அகம்—377)

இச்சூதாட்டத்தை வட்டுப்பொருவுதல் என்று கூறுவர். சொக்கட்டான், தாயம் என்று இப்பொழுதுவழங்குகின்றோம். சூதாடு கருவியைக் கவறு என்றும் வட்டு என்றும் சொல்வர்: சூதாடும் பலகையை வல்லுப் பலகை என்பர்: சூதாடு களத்தைக் கழகம் என்பர். இவ் விளையாட்டுக்கு வேண்டுங் கைத்தொழில் வெல்லுமாயம் படம் பிடித்தெறிதல். அதனால் ஒவ்வொருவர் கைதேர்ந்தவர்களாய் இருப்பார்கள். இதில் கள்ளத்தனமாய்க் கை கரந்து விளையாடுதலும் உண்டு. அதிலே சச்சரவுகளும் ஏற்படும். சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தான் தாமப்பல் கண்ணனை வெகுண்டு வட்டுக் கொண்டெறிந்த செய்தி புறம்—43-ஆம் பாடலால் தெரிகிறது. இத்தகைய சூது விளையாட்டுகள் தீங்கு பயக்கும் என்று திருக்குறள் கண்டித்திருப்பதும் இங்கே குறித்தல்தகும்:

" கவறுங் கழகமுங் கையுந் தருக்கி  
இவறியா நில்லாகி யார் "

குடுகுடு கிழவராய்த் தள்ளாடிக் கோலூன்றி இருமிக் கொண்டிருக்கும் நிலையிலுங் கூடத் தொடித்தலை விழுத்தண்டினர் என்னும் புலவர் தாம் இளமையில் ஆடிய விளையாட்டை இனிக்கஇனிக்க நினைத்துத்தவித்துருகுகிறார். அவர் எவ்வாறு விளையாடினாராம் தெரியுமா? ஒளிப்பு மறைப்பு அற்ற வஞ்சனையில்லாத இளம் பிள்ளைகளாகச் சேர்ந்து, நீராடுகின்ற இளமகளிருடனே கூடித்தழுவு வழித்தழுவியும் ஆடியும், கரையிலுள்ள பெரிய மருத மரத்தின் கோடுகளில் ஏறி ஆழமான மடுவின் கண் துடுமெனக் குதித்து அடியிலுள்ள மணலை எடுத்து மேலே கிளம்பிவந்து, கரையில் நிற்போருக்குக் காட்டித் தம்முடைய ஆற்றலை வெளிப்படுத்தியும், கல்வியில்லாத இளமைக் காலம் இனிது விளையாட்டிலே கழிந்ததாம். இனி அந்தக் காலம் முதுமையை அடைந்த தமக்கு எங்ஙனம் கிட்டப்போகிறது என்று ஏங்கிப் பாடுகிறார்:

" இனிநினைந் திரக்க மாகின்று திணி மணற்  
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்  
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து  
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி  
மறையென லறியா மாயமி லாயமொடு  
உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து  
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்  
கரையவர் மருளத் திரையகம் பிதிர  
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து  
குளித்து மணற் கொண்ட கல்லா விளமை  
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ  
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்று  
இருமிடை மிடைந்த சிலசொற்  
பெருமூ தாளரே மாகிய எமக்கே "  
(புறம்—243)

சிறுபிள்ளைகள் தரையில் கட்டளையாகக் கோடு கிழித்து அரங்கு இழைத்து, அதில் சிறு ஓட்டுச் சில்லு அல்லது நெல்லிக்காயை வீசி

யெறிந்தும், உண்டை உருட்டியும் குதித்துத் தாவிக் காலால் செதுக்கித் தள்ளிக் கோட்டில் படாமல் குதித்து விளையாடும் விளையாட்டுக்குப் பாண்டி விளையாட்டு என்பது பெயர். இதோ ஒரு சிற்றூரின் வேப்ப மரத்து நிழலில் இன்னும் கல்வி கற்கத் தொடங்காத சிறுவர்கள் நெல்லி வட்டாடுவதைக் காண்மின்!

"ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்
கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிருஅர் நெல்லிவட் டாடும்
வில்லே ருழவர் வெம்முனைச் சீறூர்"
(நற்றிணை—3)

நெல்லி வட்டாடுதல் ஒருவகைக் கோலி விளையாட்டாகவும் இருக்கலாம் என்று தோன்றுகிறது. இக் காலத்துக் கோலி விளையாட்டை உண்டை உருட்டுதல் என்று அக்காலத்தில் வழங்கினர் போலும். பரிமேலழகர் வட்டாடலை உண்டை உருட்டல் என்றே வழங்கினர். திருவள்ளுவரும் திருக்குறள் நூலில் "அரங்கின்றி வட்டாடியற்றே" என்று குறிப்பிட்டுள்ளார். ஆனால் சில உரைகாரர்கள் வட்டாடலைச் சதுரங்கமாகிய சூது விளையாட்டு என்று பொருள் கூறினர். சூதென்னும் முகடி என்று அதனை அறவே வெறுத்தொதுக்கிய திருவள்ளுவர் உண்மை வாயிலாக அதனைக் கொண்டுவந்து இங்கே குறிப்பிட்டு வேண்டாவிதமாய் நமக்கு நினைவூட்ட மாட்டார் என்பது குறிப்பிடத் தக்கது.

பழங்காலத்தில் இளைஞர்களுடைய விளையாட்டுகள் எல்லாம் உடல் உறுதி பெறும் வகையிலும், வீரம் உண்டாகும் வகையிலும், உடல் வலிபெற்று அச்சமும் கூச்சமும் அகலும் விதத்திலும், சுறுசுறுப்புடன் எப்பொழுதும் உழைக்கும் விதத்திலும், மனவூக்கத்தை எழுப்பும் முறையிலும் அமையப் பெற்றிருந்தன. அக்காலத்தில் தமிழர் வீரவாழ்க்கையும் விழுப்புண்ணுங்கொண்டு, போரெனிற் புகலும் புனைகழல் மறவர்களாய்த் திகழ்ந்தார்கள். இளமையிலிருந்தே போருக்கு வேண்டிய பயிற்சிகள் எல்லாம் விளையாட்டாகவே கற்றுக் கொண்டிருந்தார்கள். ஆடவரும் பெண்டிரும் கூடிப் புதுப்புனல் ஆடுதலையும் ஒரு விளையாட்டாகக் கொண்டிருந்தனர். கொல்லேறு தழுவுதல் என்பது உயிருக்கும் உடலுக்கும் கொடிய ஊறு விளைக்கக்கூடிய ஒரு பொல்லாத விளையாட்டு. அதில் மணமாகாத இளைஞர்கள் மகிழ்ச்சியுடன் இறங்கி, அடங்காத காளையையும் அடக்கிப் பிடித்துத் தங்கள் உடல் வலியினையும் வளப்பினையும் பிறருக்கு ஐயந்திரிபற எடுத்து விளக்கி அழகான கன்னியரை மணம்செய்து கொள்வது வழக்கம். இதனை முல்லைக் கலிப்பாடல்களிற் பரக்கக் காணலாம். மற்றும் யானையேற்றம் (கலித்தொகை—97) குதிரையேற்றம் (கலித்தொகை—96) தேர் செலுத்துதல் முதலியவற்றையும் விளையாட்டாகவே பழகி மிக்க தேர்ச்சி பெற்றிருந்தார்கள். சிறு குழந்தைகளுக்குக்கூடச் சிறு தேர்களைச் செய்து இழுத்து விளையாடச் செய்து, பின்னர் கூர்ந்து இன்புறற்கு வழி கோலி யழைத்தனர்போல் தோன்றுகிறது.

"தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்தின் புறாஅ ராயினுங் கையின்
ஈர்த்தின் புறூஉம் இளையோர் போல"
(குறுந்தொகை—61)

ஆங்கிலத்தில் Boxing அல்லது Wrestling என்னப்படும் குத்துச்சண்டை அல்லது மற்போரையும் தமிழர் ஒரு விளையாட்டாகவே பழகி வந்தனர். பெருநற்கிள்ளி என்னும் சோழவரசன் ஆமூர் மல்லனைப் பொருது அட்டுநின்ற செய்தியைப் புறநானூறு 80-ஆம் பாடலிற் காணலாம். அவ்வரசு ஒவ்வொருவருடைய ஆற்றலையும் வலிமையையும் காட்டுவதற்காக நடத்தப்படும் மற்போர்கள் முதலிய விளையாட்டுகள் ஒரு போரவையின் முன்னிலையில் நிகழ்வனவாகும். ஆங்கிலத்தில் Umpires என்று சொல்லப்படும் 'நடுவர்களே இப்போரவையத்தார் ஆவர். இத்தகைய போரவையின் முன்னர்ப் பொழுது வென்றதாலேயே, அச் சோழவரசன் போரவைக்கோ பெருநற்கிள்ளி என்று அழைக்கப்பட்டான் போலும். இவ்வித விளையாட்டுகளை ஆடவரும் பெண்டிருமாய் மக்கள் பெருந்திரளாகக் கூடி வந்து கண்டு களிப்பார்கள். இதைக் குறித்து ஒரு சுவையுள்ள செய்தி அகநானூற்றிற் குறிக்கப்படுகின்றது.

கணையன் என்பவன் வடநாட்டிலிருந்து ஆரியப் பொருநன் என்னும் ஒரு மல்லனை வரவழைத்து, அவன் உடல் வன்மையைக்கண்டு வியந்து கொண்டாடினான். பாணன் என்பவன் ஒரு தமிழ்நாட்டு மல்லன். அகன்ற மார்பும் உயர்ந்த தோள்களும் படைத்தவன். பெருமிதங் கொண்டிருந்த ஆரியப் பொருநன் பாணனை மற்போருக்கு அறைகூவி அழைத்தான். பாணன் தன் தோள்களை எவ்வளவு இறுகப்பற்றிப் பிடித்தாலும், தான் திமிறிக் கொண்டு வெளிவந்து விடுவதாக வீரமொழி புகன்றான் அப்பொருநன். அவ்விதமே, கணையன் முன்னிலையில் இப்போர் நடக்கலுற்றது.



பாணன் ஆரியப் பொருநனின் தோள்களைத் தன் இருகைகளாலும் மார்போடு இறுக்கிப் பிணித்துக் கொண்டான். ஆரியப் பொருநன் தன் முழுவலிமையையும் செலுத்தி முயன்று வெளிவந்தான். எவ்வாறு? பாணன் பிடித்த பிடி நெகிழ்க்கவில்லை. ஆரியப் பொருநன் அவன் எதிரிற் கீழே இருதோளும் அற்று விழுந்து கிடந்தான். அவன் தோள் இரண்டும் பாணனது பிடியிலேயே பொருந்தி யிருந்தன. பொருநன் விசையாய் இழுத்துத் தன் வலியைக் காட்டவும், அவன் தோள்கள் பிய்த்துக் கொண்டுவிட்டன. தோளற்ற அவனது உடல் தரையில் விழுந்து துடித்தது. அதைக் கண்டு நாணிக் கணையன் தலைகுனிந்தான். பாணனது பிடி உடும்பையும் முதலையையும்வென்று விட்டதென்றே சொல்லலாம்:

"பாணன், மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத்திரள் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்
கணையன் நாணி யாங்கு"
(அகம்—386)

இளம் பருவத்திலிருந்தே தமிழ் மக்கள் இத்தகைய போர்த் தொழில்களைப் பயின்று வந்தார்கள். ஒவ்வோர் ஊரின் பொது மன்றத்திலும் போர்க்களம் அமைக்கப் பெற்றிருக்கும். அது மர நிழலின்கண் மணல் நிறைத்து வனப்புற அமையப்பெறும். அதை இப்பொழுது கோதாக்குழி என்றும், ஆங்கிலத்தில் Arena என்றும் கூறுகின்றனர். இங்கு போரவைத்தாரின் முன்னிலையில் பயிற்சிகள்நடைபெறும். அவ்வாறு பயிலும்பொழுதுகூடப் பெருஞ்சினமும் மறமும்காட்டி வெங்காட்டாது இளைஞர்கள் முனைந்து ஊக்கமாய் விளையாடுவார்களாம்:

"நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு
நாண்மீன் விராய கோண்மீன் போல
மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக்
கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டிப்
பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅ-
திருஞ்செருவி னிகன் மொய்ம்பி னோர்"

என்பது பட்டினப்பாலை. இத்தகைய படைக்கலப் பயிற்சிகளோடு, கோழி, தகர், யானை, பூழ், சிவல், கிளி, பூவை, குதிரை முதலியவற்றை ஒன்றோடொன்று பொரவிட்டும், ஓடவிட்டும், போட்டிகள் நடத்திப் பணயம் வைத்து விளையாடுவதும் உண்டு என்பதைப் புறப் பொருள் வெண்பா மாலை கூறுகிறது. தேர்களையும் வண்டிகளையும் பந்தயத்தில் ஓட்டம்விடுவதும், விற்போர்கள், வாட்போர்கள் நடத்துவதும், யாழ், பாட்டு, கூத்து என்னும் இவைகளிற் போட்டிகள் நடத்துவதும், கூத்தாட்டவைக் குழாங்களில் நாடகங்கள், பாவைக் கூத்துகள் காண்பதுவும் வழக்கமான விளையாட்டுகளாய் இருந்தன. திருவிழாக் காலங்களில் இவை சிறப்பாகக் கொண்டாடப் பெறும். திருநாட்களில் வீரர்கள் கூடித் தத்தம் சேரிகளில் நிகழ்த்தும் விளையாட்டுப் போர்களைச் சேரிப் போர் என்றும் மள்ளர் விழவு என்றும் வழங்குவர். அப்போர்களில் வீரர்கள் புண்களை மார்பிலும் முகத்திலும் விரும்பி ஏற்று மனமகிழ்வர். திருவோணநாளில் மதுரையில் நிகழும் சேரிப்போரைப் பற்றி மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது:

"மாயோன் மேய வோண நன்னாள்
... ... ...
மறங்கொள் சேரி மாறுபொரு செருவின்
மாறு துற்ற வடுப்படு நெற்றிச்
சுரும்பார் கண்ணிப் பெரும்புகன் மறவர்"

இக்காலத்தும் திருவிழா நாட்களில் சிலம்பம் விளையாட்டுகள் நடக்கின்றன.

தமிழ் நாட்டுப் பண்டைய வரலாற்றை நாம் துருவி ஆராயும் பொழுது, பிறர் நாட்டைக் கைக்கொள்ளும் நோக்கம் சிறிதுமின்றித் தங்கள் வலிமையை நிலை நாட்டுவதற்காகவே தமிழ் மன்னர்களும் சிற்றரசர்களும் பெரும்போர்கள் நிகழ்த்தியிருக்கிறார்கள். போர்த் தினவுகொண்டு உடற்றிய சில போர்களில் இருதிறத்தார்களும், ஒருவராவது எஞ்சினர் என்றில்லாமல், அனைவரும் மடிந்தும் போயிருக்கிறார்கள்.

சேரி விழவுகளிலும் திருவிழாக் காலங்களிலும் ஆடவரும் பெண்டிரும் தம்முட் கலந்து, கைகோத்துத் தழுவித் துணங்கை யாடுதலும்—குரவையயர்தலும் தமிழ் நாட்டில் பெருவழக்கிற்றா யிருந்தன. துணங்கை என்பது ஒருவகைக் கூத்து. அதனைச் சிங்கிக் கூத்து என்றும் கூறுவர். "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத், துடக்கிய நடையது துணங்கையாகும்" என்று அதன் இலக்கணமும் கூறப்பட்டிருக்கிறது. ஆடவர் மகளிருக்கு முதற்கை கொடுத்து ஆடுவார்களாம். மகளிருடைய துணங்கை நாளும் மள்ளருடைய சேரிப்போரும் ஒன்றாய் நிகழும் என்பது தெரிகிறது.

"வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்
துணங்கை நாளும் வந்தன வவ்வரைக்

கண்பொர மற்றத்ன் கண்ணவர்
மணங்கொளற் கிவரும் மள்ளர் போரே''

(குறுந்தொகை—364)

ஆடவர் விளையாட்டுகளை விட மகளிரின் விளையாட்டுகளே மிகுதியாகச் சங்க இலக்கியத்திற் காணப்படுகின்றன. அக்காலத்தில் இளமகளிர் யாதொரு கவலையுமின்றி விளையாடுவதே தொழிலாகக் கொண்டிருந்தார்கள். பெண் குழந்தைகளை விளையாட விடாமல் வீட்டினுள் அடைத்துவைப்பது பெரும்பாவம் என்றும், அதனுல் செல்வம் தேய்ந்துவிடும் என்றும் கருதினர்கள். இதனை,

'' விளையா டாயமொ டோரை யாடா
தினையோ ரில்லிடத் திற்செறிந் திருத்தல்
அறனு மன்றே யாக்கமுந் தேய்ம் மெனக்
குறுநுரை சுமந்து நறுமல ருந்திப்
பொங்கிவரு புதுநீர் நெஞ்சுண வாடுகம் ''

(நற்றிணை—68)

என்பதால் அறியலாம். இளமகளிரைக் குறிக்கும் போதெல்லாம் '' ஓரையாயம் '' என்றும் '' பொய்தன்மகளிர் '' என்றும் பாடுகின்றனர். ஓரை என்பது ஒருவகை விளையாட்டு. அது இன்னது என்று நன்ருக விளக்கப்படவில்லை. அது பஞ்சாய்ப் பாவைகொண்டு மகளிராடும் விளையாட்டு என்று சிலர் கூறுவர்.

மகளிர் ஆடும் விளையாட்டுகள் பலவும் பலராகக் கூடியிருந்து விளையாடுவனவாகும். பெண்களுக்கென அமைந்த விளையாட்டுகள் அவர்களுடைய மெல்லியல் மேனியின் வளர்ச்சிக்கும் எழிலின் எழுச்சிக்கும் ஏற்றபடி இருந்தன. அவர்கள் வயது வந்து இல்லறம் ஏற்றுக் கணவர் உவப்பப் புதல்வர்பயந்து வாழ்க்கையை இனிது நடத்துவதற்குத் தக்க முறையில் பயிற்சியளிக்கும் விளையாட்டுகளே அவர்களுக்கு அமைத்துக் கொடுக்கப்பட்டிருந்தன. வண்டலயர்தல், சிறுவீடு கட்டுதல், சிறுசோறு சமைத்தல், பாவையாடல் முதலியன இல்லறக் குறிப்புடனேயே இயன்றுள்ளன. இவ்வாடல்களைப் பன்னிரண்டு வயது வரையில் பெண்கள் ஆடி வந்தனர். அவற்றை விளையாட்டாகக் கருதாது, விழவு நோன்பு அயர்வதாகவே கருதி விளையாடினர். அவற்றை உண்மையோடு செய்து வந்தால் நல்ல கணவனை அடைய முடியும் என்ற நம்பிக்கையும் நிலவி வந்தது.

பூந்தாதும் பஞ்சும் பட்டும்கொண்டு அழகான பொம்மைகள் செய்து, அவற்றை ஈன்றெடுத்த குழந்தைகளைப் போலப் பேணி, குழமகன், சிறு முத்தன் போன்ற பெயர்களைச் சூட்டி, அவை ஒன்றோடொன்றை மணம் செய்வித்து மண விளையாட்டு நடத்துவதை ஒரு நோன்புபோலக் கொண்டாடினர். இதற்காகப் பல வீடுகளிற் சென்று ஐயம் எடுத்து வந்தும் பிறர்க்கு இட்டு அறத்தைப் பெருக்கினர் :

'' பொய்தல மகளையாய்ப் பிறர்மனை பாடிநீ
எய்திய பலர்க்கீத்த பயம்பயற் கிற்பதோ ''
'' சிறுமுத் தனைப்பேணிச் சிறுசோறு மடுத்துநீ
நறுநுத லவரொடு நக்கதுநன் கியைவதோ ''

கலித்தொகை—59

தாம்வளர்க்கும் பாவைக்கு ஏதாவது சிறு துன்பம் நேரிட்டால் அதைப் பெரிதாகக் கொண்டு தாங்களும் துயருறுவார்களாம் :

'' தாதிற் செய்த தண் பனிப் பாவை
காலை வருந்துங் கையாறோம் பென ''

(குறுந்தொகை—48)

அச்சிறு பெண்கள் பாவையை மடியில் வைத்துக் காலை நீட்டி இருந்துகொண்டு இதோ பாலூட்டுவதைப் பாருங்கள் !

'' உருஅ வறுமுலை மடாஅ
உண்ணுப் பாவையை யூட்டு வோளே ''

(ஐங்குறுநூறு—128)

மார்கழி மாதத்தில் இளமகளிர்கள் கூடிப் புலரி விடியலின்கண் நீர்த்துறையை நண்ணி நீராடிப் பாடித்தொழுது நோன்பிருப்பர். இதன் பலன் நல்ல கணவனை யடைதலாகும். இதனைத் தைநீராடல் என்றும் அம்பாவாடல் என்றும் கூறுவர் :

'' வையெயிற் றவர்நாப்பண் வகையணிப் பொலிந்துநீ
தையி னீராடிய தவந்தலைப் படுவாயோ ''

(கலித்தொகை—59)

சுனையிலும் ஆற்றிலும் கடலிலும் பாய்ந்து நீந்தி ஒடிவிளையாடி, மகளிர் உடற்கட்டுடன் நோயின்றி வாழ்ந்தனர். நுங்கின்நீரும் கருப்பஞ்சாறும் தெங்கின் இளநீருடனே கலந்து முந்நீருண்டு முந்நீர்ப் பாய்ந்து முழுகியாடினராம். (புறம்—24) அவலை உண்டு, அலை கடற் பாய்ந்தனராம். (புறம்—63) இளமகளிரை நீர்த்துறைக்கண் கண்டுவிட்டால் நண்டுகள் பாடு திண்டாட்டம்தான். அலவனாட்டுதலை ஒரு விளையாட்டாகவே பெண்கள் கொண்டிருந்தனர். பொன்னாலும் பளிங்காலும் கழங்குகள் செய்து அம்மானை விளையாட்டு ஆடினர். கொச்சியும் முல்லையும் வளர்ப்பது ஒரு விளையாட்டு. சிலம்பெதிர் கூவுதலும் ஒரு விளையாட்டு.



மலைப் பக்கங்களில் குகைகளின் முன்னால் நின்று கூவியழைத்து எதிரொலி கேட்டு மகிழ்வர். இது மணமான பின்னர்க் கணவன் சொல்லுவதையே தாம் சொல்லி வாழ்க்கை நடத்துவதற்குப் பயிற்சி போன்றமைந்தது :

'' நின்மலைச், சிலம்புபோற் கூறுவ கூறும்
இலங்கே ரெல்வளை யிவளுடை நோயே ''

(கலித்தொகை—46)

இளம் பெண்கள் மலர்களும் கொய்து தழையுடைகளும் தொடலைகளும் தைத்து உடுத்து விளையாடினர். வேங்கை மரத்தினடியிற் சென்று 'புலி! புலி!' என்று கூப்பிட்டு, வளைந்த கொம்புகளில் மலர் பறித்து விளையாடினர். கும்மி கோலாட்டம் என்றால் ஒரே கும்மாளம்தான். ஊஞ்சல் ஆடுவதில் ஊக்கமாய் முனைந்து நிற்பர். அக்காலத்தில் சந்தன உரலிலே முத்து நிறைந்த யானைக் கொம்பால் தினையைக் குத்தி வள்ளைப் பாட்டுப்பாடி விளையாடினர். சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதை உரையில் அடியார்க்கு நல்லார்காட்டிய ''சிந்துப் பிழுக்கையுடன்'' என்று தொடங்கும் மேற்கோளிற் குறிக்கப்பட்ட பல்வரிக் கூத்துக்கள்பலவற்றுள், திருவாசகத்துட் காணப்படும் அம்மானை, வண்டு (திருக்கோத்தும்பி) தோள் வீச்சு (திருத்தோணுக்கம்) சாழல், உந்தி, அவலிடி (திருப்பொற்சுண்ணம்) கொய் முள்ளிப்பூ (திருப்பூவல்லி), படுபள்ளி (திருப்பள்ளியெழுச்சி), தெள்ளேனம் முதலியன யாவும், பாடிக்கொண்டே மகளிர் ஆடும் விளையாட்டுகள் என்பது தெளிவாகும். இவை போல்வன பண்டைக்காலத்தில் பல்கி யிருந்தனபோலும். கை கோத்தாடும் குரவையைத் தெற்றியாடல் என்றும் கூறுவதுண்டு.

அந்நாளில் ஆடவர் விளையாடாத - மகளிர்க்கே உரித்தாயிருந்த விளையாட்டு ஒன்றுண்டு. அதுதான் பந்து விளையாடுதல். பந்துகள் பட்டுத் துணி கொண்டு நூலால் வரிந்து கட்டப்பட்டுக் கண்கவர் வனப்பினவாய் இருக்கும். சிலம்புகள் கலீர் என்று ஒலிக்கப் பெண்கள் காலால் அடித்துப் பந்து விளையாடுவர். பந்து விளையாட்டு காலுக்கு வலிமை ஊட்டும் : கால் சலித்துப் போனால் வீட்டு முன்றிலின் மணலிடத்திலிருந்து கலகலவென்று வளையல் ஒலிக்கக் கழற்காய் ஆடுவர். அம்மானை விளையாட்டு கைகளுக்கு உரம் ஊட்டும் :

'' தாமனியப் பொற்சிலம் பொலிப்ப வுயர்நிலை
வான்றோய் மாடத்து வரிப்பந் தசைஇக்
கைபுனை குறுந்தொடி தத்தப் பைபய
முத்த வார்மணற் பொற்கழங் காடும் ''

(பெரும்பாணாற்றுப் படை)

பண்டைநாளில் பாவையரே பந்து விளையாடுதலைப்பழக்கத்திற் கொண்டிருந்தனர். ஆடவர் விளையாடுவதில்லை. இதற்குச் சான்று யாதெனிற் கூறுவாம் : பாண்டிய மன்னர் மதுரைக் கோட்டை வாயிலிற் பறக்க விட்டிருந்த மீனக் கொடிக்குப் பக்கத்தில் பந்தும் பாவையும் கட்டித் தொங்க விட்டிருந்தனர். '' எங்கள்மீது பகைமை கொண்டு போரில் எதிர்த்துவரும் மடலோர் இருப்பார்களே யானால், அவர்களை போரில் முறியடித்து மகளிராக்கிக் கையில் அந்தப் பந்தையும் பாவையையும் கொடுத்து விளையாட விடுவோம் '' என்ற எச்சரிக்கையின் அறிகுறியாகவே அவை அங்கு கட்டப்பட்டிருந்தனவாம். அவ்வாறு யாரும் பகைவர் வராததால், அவை வாயிலில் தூங்கிக் கொண்டிருந்தனவாம்.

'' செருப்புகன்றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடல் ''

(திருமுருகாற்றுப்படை)

இதனால் பந்து விளையாடுதற்குரியார் மகளிரே என்பது தெற்றெனப் புலனும். அக்காலத்து மகளிர் பந்து விளையாடிய திறனையெல்லாம் சிலப்பதிகாரம், பெருங்கதை போன்ற நூல்களில் விரிவாகக் காணலாம். எஞ்சாது மேற்கோள்களைக் கூறுவதானால் இக்கட்டுரை ஒரு பெருநூலாக விரியும் என்று அஞ்சி ஒரு சில மேற்கோள்களே தரப்பட்டுள்ளன. இக்கட்டுரையும் விளையாட்டாகவே எழுதப்பட்டது. இதைப் படிப்போர்களும் விளையாட்டாகவே படித்து மகிழ்வார்களாக.

(மதுரைத் தமிழ்ச்சங்கப் பொன்விழா மலர் 1956)





# வெறுங்கூடு



[தம்பி]

அருமையாக உன்னைப் பெற்று வளர்த்து அடிக்கொருமுறை உன் நலத்திலே கவனம் செலுத்தி உன்னைக் கண்டு களித்த தாய் இல்லையே என்ற நினைவே ஏற்படாமல் உன்னைப் பாதுகாத்து வந்தேன். வெளியூரிலே போய் நீ படிக்கப் போயிருந்தபோது உன்னைப் பிரிந்திரும்பதற்காகநான் மிகவும்வருந்தினுலும் நீ படிப்பும் புகழும் பெற்று வருவதைக் காணப் போகின்றேமென்ற எண்ணத்தால் மகிழ்ச்சி கொண்டு என்னை ஆற்றிக் கொண்டிருந்தேன். இதுவரை என் கனவுகளை யெல்லாம் நினைவாக்கிக் காட்டி வந்தாய்! அதையெல்லாம் எண்ணும் போது ஆனந்தக் கண்ணீர் ததும்புகிறது. ஆனல் இப்போது நீ அடம் பிடித்துச்சாதிப்பதை எண்ண உள்ளம்வெந்து நொந்து போகிறது. கொஞ்சம் எண்ணிப் பாரப்பா! எனக்கு என்ன குறை. பெரிய வீடு இன்னும் தேவையானல் பயன்படுத்திக்கொள்வதற்குப் பல வீடுகள். புதிதாக கட்டிக்கொள்வதாக இருந்தாலும் போதுமான காலிமனைகள், எப்போதும் தப்பாமல் முப்போகம் விளையும் நஞ்சையும், துணைப் பொருள்களை பெற்றுத் தரும் புன்செய் நிலங்களுலம் மா, பலா தென்னை முதலிய பொருள்களைத் தரும் தோப்புத் துரவுகளும், பூக்கள் நிறைந்து விளங்கும் நந்தவனங்களும், இந்த ஊரில் வேறு எவருக்கும் இல்லாத அளவு நம்குடும்பத்திற்கு இருக்கிறது. ஆனல் குடும்பம் என்ற பெயருக்கோ ஒரு 'துளிர்'போல நீதான் இருக்கிருய். ஆல் போல் பரந்து பெருகியிருந்த குடும்பம் அறுகு போல் நீயும் நானுமான இரண்டிதழ்களாகத் தனித்து நிற்க நேர்ந்து விட்டது. இழந்தவர்களையும், இழக்க நேரிட்ட தன்மைகளையும் பற்றி நான் சற்றும் கவலைப் படவில்லை. உன் பிடிவாதந்தால் என் உள்ளத்தின் எண்ணங்களுக்கு முற்றுப் புள்ளி வைக்கிறேனென்ருயே அதைத்தான் என்னல் சகித்துக்கொள்ள முடியவில்லை.

நானுன்னைப் பொன் கேட்கவில்லை-பொருள் சேகரிக்கும் பேராசை கொண்டு உன்னைப் புண்படுத்தவில்லை! எங்கும் செல்லாது இங்கேயே இருந்து கிழத் தந்தையின் அழுகுரலுக்குச் செவிகொடுத்துக்கொண்டிரு என்று பித்தம் பிடித்து உளரவில்லை. "திருமணம் செய்து கொள்" என்கிறேன். கட்டாயத்திருமணம் அல்ல! உன் விருப்பத்திற்குரியவளை என் குடும்பத்திற்குரிய வளாக ஏற்றுக்கொள்ளு கிறேனென்கிறேன். மற்ற வீடுகளில் நடை பெறுவது போல உன்னைக் கூறச் சொல்லிக் கேட்டு, நீ கூறியதும் உன் சொல்லுக்கு எம் ஞய்விடமாட்டேனென்று உறுதிசெய்கிறேன். ஜாதி மதங்களைப் பொருட்படுத்த மாட்டேன். உயர்வு தாழ்வு பாராட்ட வில்லை நான்! உன் விருப்பம் எதுவோ அதுவே எனது சம்மதம். எனக்கொரு பகைவனிருந்து அவன் மகள் மீது நீ ஆசை வைத்திருபபதானுலும் அதை மனமொத்து ஏற்றுக்கொள்ளுகிறேன். இன்னு மேன் மௌனம் சாதிக்கிருய் 'சொல்லப்பா சொல்' என் நிலையையும் நினைவையும் அறியும் திறன் அற்றுப் போய் விட்டதா உனக்கு இது போல் கூறி உன் எண்ணத்தை அறிந்து கொண்டபின் எரியும் தீயாக மாறிவிடுவேனே என்ற ஒரு சந்தேகம் உன் தந்தையிடம் உனக்கு ஏற்பட்டிருக்கிறதா? ஊரில் நிகழும் பல நிகழ்ச்சிகளைப் போலவே உன் தந்தையின் மனப்போக்கும் இருகககூடுமென்ற முடிவுக்கு வந்து விட்டாயா? இல்லை! நிச்சயமாகச் சொல்கிறேன் உன் கருத்துக்குச் சிறிதளவும் மாறு பட்டிருக்கமாட்டேன். நீ என்ன சொன்னுலும் அதை அப்படியே ஒப்புக் கொள்கிறேன். உன் சம்மதம் எனும் சொல்லொன்று கிடைத்தால் போதும். அந்தஸ்து ஜாதிபேதம் எதையும் பொருட்படுத்த மாட்டேன். என் ஆவி பிரியுமுன்-வாழ்நாள் இறுதியடையுமுன் என் இதயத்திலே கொந்தளித்துத் துவண்டு கொண்டிருக்கும் எண்ணக் குமுறல்களுக்கு ஆறுதல் கொடு. உன்னைப் படிக்கவைத்தேன். பலரோடு பழக அனுமதித்தேன் பகட்டும் படாடோபமும் கூட நீ விரும்பிய அளவில் செய்து கொடுத்தேன். இன்னமும் அவைகளில் குறை வைக்க விரும்ப வில்லை.

இப்போது தந்தை தனயன் என்ற முறையிலே உன்னை நான் கேட்கவில்லை உன் நண்பன்; உடன் பயின்ற பள்ளித் தோழன் இப்படிப்பட்ட பொதுவான முறை யமைத்துக் கொள். அந்த அளவுடன் என் கேள்விகளுக்குப் பதில் சொல். இன்னுமா மௌனம். மௌனத்திற்கு அவசியமே இல்லையே! வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லென்று வரமல்லவா கேட்டு நிற்கிறேன். சொல்லப்பா! இன்னமும் உன்னைப் பன்னிப்பன்னிக் கேட்டுக்கொள்கிறேன். என் விருப்பத்தை மறுக்காதே! நீ சொல்வதை தாரதம்மியமின்றி ஏற்றுக் கொள்கிறேன். இனி எனக்கு வாழ்வென்பதை நான் எதிர்பார்க்கவா போகிறேன், உன் வாழ்வுதான் எனக்கு நல்வாழ்வு: அதைத்தான் உன்னிடம்வேண்டுகின்றேன். நீவேண்டுமென்றே மௌனம் சாதிக்கிருய் என்று என்னல் குற்றம் சாட்டவும் முடியவில்லை!"

இவ்வாறு அந்த முதியவர் மிகவும் மன்றுடி, மண்டியிடாக்குறையாக வேண்டிக்கொண்டார். அவன்பெயர் ஆனந்தன். அவர் பூரணலிங்கம். நல்லமருதூர் பெருந்தனக்காரர் அவர். பெருத்த நிலபுல ஆளம்பு உள்ளவர். அவர் பெற்றிருந்த செல்வங்களுடன் ஊரவரின் பாராட்டுப் புகழ்ச் செல்வத்தையும் பெற்றிருந்தார். ஆனந்தனும் அவ்வாறே! அப்பாவுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்திருப்பவனென்று யாவரும் பாராட்டினர். எவர்மாட்டும் இன் சொல்லும், குளிர் முகமும், பண்புமாரு நடைமுறையும் அவன் கல்வி உயர்வையும் மீறி நின்றது. யார்காணினும் கைகூப்பி வரவேற்கத்தகுந்த அளவு அவன் நடைமுறைகள் இருந்து வந்தது. பூரணலிங்கமும் தன்மகனிடம் அதிக நேரமும் அதிகச் சொற்களும் செலவிட்டது அன்றுதான். அத்துணை மேன்மையான முறையில் பழகிக்கொள்பவர்கள். அத்தகையோரிடையேதான் முற்கூறிய உரையாடல்கள் நடைபெற்றது.

ஆனந்தன் இதுவரையும் மௌனமாகவே யிருந்தான். அவன் உள்ளம்மட்டும் "எவ்வளவு சங்கடமான நிலை, வாழ்க்கையிலே பலர், உள்ளத்திலே கிடந்துழற்றும் காதலை வெளியிடவும் - பலரறியப்பட்டுவிட்ட காதலைச் சிலர்கூட ஏற்றுக் கொள்ளாமையால் இடர்ப்படுவோரும் எண்ணற்றவர்கள். அப்படி ஏற்றுக் கொள்வதாக இருந்தாலும் சாதி மதம்-குலம் கோத்திரம், இல்லாதவன் ஏற்றம் பெற்றவன் என்ற பாகுபாட்டில் வெட்டி வீழ்த்தப் படுகின்றன. இங்கே என் தந்தை 'எதை நான் கூறினுலும் சம்மதம் என்று கூறினல் போதும்'என்கிருர். கற்பனையாகக் கூறுவதாக இருந்தாலும்கூட அதற்கொரு பெண்ணை நான் உள்ளத்துள் கொண்டதில்லையே! ஆனல் அவர் எண்ணத்திலே உறுதி செய்துகொண்டிருக்கும் ஒருத்தியுடன் தான் வாழ விரும்பவில்லையென்பதும் உண்மை. இந்த அவன் எண்ணம், அவருக்கு வித விதமான கருத்துமாற்றங்களைத் தந்தது. இத்துணை நாளும் சிறிது சிறிதாக நிறைந்து வந்துகொண்டிருந்த அவர் ஆசை இன்று அலைமோதிக் கரையுடைக்கும் அளவுக்கு அன்றைய காலையில் வந்துள்ள ஒரு பேச்சு வார்த்தையே காரணமாகும். வழக்கம்போல் பேசாது உள்ளத்து எண்ணத்தை வளர்த்துக் கொண்டே இருந்திருக்கக் கூடும்." எதிர்பாராத விதமாகச் சந்தித்திருக்கிரும்! எதிர்பார்த்திருந்த செய்தியை இன்றுதான் மனம் விட்டுப் பேச ஒருவாய்ப்புக் கிடைத்திருக்கிறது என்று முதல் குறிப்பிட்டுப் பேச்சைத் தொடங்கினர் மிராசு நல்லதம்பி. அவர் அந்தக் கிராமத்தின் மிராசுமட்டுமல்ல பொதுவில் மிகுந்த வரவேற்பு - பாராட்டு இவைகளுக்கு உரியவர். அவரது நாட்டமெல்லாம் பூரணலிங்கத்தின் சம்பந்தம் பெறவேண்டு மென்பதும் ஆனந்தனுக்கு தன் மகள் அங்கையற்கண்ணி வாழ்க்கைப்பட்டால் அவளும் அவளால் தாமும் குடும்பமும் இதமும் இன்பமும் பெறலாம் என்பது அவர் நம்பிக்கை. தன் வேண்டுகோளைப் பூரணலிங்கம் மறுக்க மாட்டாரென்ருலும், அவர் மகன் ஒப்பவேண்டுமே என்ற எண்ணத்துடனேயேதான் அந்தப் பேச்சைத் தொடங்கினர். அதன் நிழற்காட்சிதான் முன் நிகழ்ச்சி! ஆனந்தனைப் பற்றி எல்லோருக்கும் நல்லெண்ணம் உண்டு என்ருலும் அவன் போக்கைப் புரிந்து கொள்ள யாராலும் இயலாது. இது இன்று நேற்றென்பதல்ல. அவன் கல்லூரி வாழ்வு காலந்தொட்டு அதற்குமுன்னருங்கூட அப்படித்தான். வேடிக்கை விளையாட்டுகளிலே அவன் சிந்தனை செல்வதில்லை. எதையும் ஆராயும் மனப்பான்மையும், அதில் ஒரு நுணுக்கமும் புதுமையும் கண்டறியும் பண்பும் கொண்டவன். நல்ல பாடகன், ஓவியன், உடல் வளமும் வனப்பும் உடையவன், எழுத்தாளன். அவன் எழுத்துக்களைக் கண்ணுற்று, அதில் நிறைந்திருக்கும் பொருள் செறிவு தான் அவனது உள்ளக்கிடக்கையாக இருக்குமெனக் கொண்டு தன் காதலை அவன் வயமாக்கினுள் அங்கயற்கண்ணி. நாளொருவிரைவும் பொழுதுதொருவிதமுமாக அவளின்ஒருதலைக் காதல் வளர்ந்து வந்தது. கற்பனையாலேயே காதலை வளர்த்துக்கொண்ட அவள் தன்பிடிவாதத்தால் தந்தையையும் வற்புறுத்தலானுள் மறைமுகமாக. அதையேதான் நல்லதம்பியும் பூரணலிங்கத்திடம் கட்டாயப்படுத்திப்

பேசலானர். மீண்டும் மீண்டும் பூரணலிங்கம் கேட்டும் ஆனந்தனிடமிருந்து எந்தவித மான பதிலும் கிடைக்கப் பெருததினல் அவர் முடிவு விபரீதத்தில் சென்று முடிந்ததாயிற்று. கட்டாயத்திருமணத்தில் முனைந்தார் பூரணலிங்கம். அதற்கு மேலும் அவருடைய போக்குத் தன்னை ஈடுகொடுக்க முடியாததென்ற காரணத்தால் ஆனந்தன் செய்வதின்ன வென்றறியாமல் திகைத்தான். அதன் பயன் அன்றிரவே சிறிது பணமும் ஒருசில உடைகளையும் எடுத்துக்கொண்டு ஊரைவிட்டுப் போய்விட்டான்.

காலையில் எழுந்த பூரணர், தன் மகன் காணமற் போனதை உணர்ந்து, அவன் எங்கு சென்றிருக்கக் கூடுமென்பதை ஊகித்து, சென்னையிலுள்ள அவன் நண்பனும், தன் வரையில் மிக்க நம்பிக்கையுள்ளவனுமான பாலுவுக்குச் செய்தி தெரிவித்தார். அத்துடன் எப்படியாவது ஆனந்தனைத் திருமணத்திற்கு ஒத்துக்கொள்ளச் செய்யவேண்டுமென்றும், அவன் அங்கிருந்து வேறு எங்கும் சென்றுவிடாமல் பார்த்துக்கொள்ளும படியும் செலவுக்கு வேண்டிய பணம் அப்போதைக்கப்போது தான் அனுப்பிவைப்பதாகவும் கூறினர். அதன்படியே பாலுவும் மறுநாள் ஆனந்தனை ரயில் நிலயத்தில் எதிர் பார்த்திருந்தான். அவன் எதிர்பார்த்திருந்தது வீண் போகவில்லை. ஆனந்தனைச் சந்தித்தான். ஆனல் ஆனந்தன் மட்டும் பழைய ஆனந்தனக இருக்கவில்லை. ரயிலை விட்டு இறங்கும்போதே பாலுவைக் கண்டதும், அவன் எப்படித்தான் வந்திருக்கக்கூடு மென்பதை உணர்ந்துகொண்டான். அதோடு அவன் நம்மைச் சந்தித்துத் தந்தையின் சொல்லை ஒப்புக்கொள்ள வற்புறுத்தித் தொந்தரவு செய்வான்; அமைதியை நாடிவந்த நமக்கு அல்லலைத் தருவானென்று எண்ணிய வனய் பாலுவைக் கண்ட உடனேயே தன் முக பாவத்தையும், பேச்சின் போக்கையுமே மாற்றிக்கொண்டான். ஆனந்தன் இறங்கியதும் பாலு வேகமாக வந்து:

பாலு: அடடே! ஆனந்தா! ஏதப்பா இப்படி எனக்குத் தகவலே கொடுக்கவில்லையே! தற்செயலாக இன்று ஸ்டேஷனுக்கு வந்தது எவ்வளவு நல்லதாப் போச்சு.

ஆமாம்: நீ வரக் கொஞ்ச நேரம் பிந்தியிருந்தால்கூட உண்மையை உணர முடியாமல் உன்னைத் தேடிவந்து உள்ள வேதனையை அதிகப்படுத்திக் கொண்டிருப்பேன்.

பாலு: அப்படி என்னப்பா நானுனக்கு வேதனை செய்துவிடப்போகிறேன்.

ஆன: அப்படிச் சொல்லவில்லையே நான். உன்னைத் தேடிக் கம்பெனிக்குப் போயிருப்பேன். அங்கே உன்னைக் காணவிட்டால் வேதனை அதிகரிக்குமல்லவா?

பா: அப்படியானல் இப்போது உனக்கு வேதனை ஏற்பட்டிருக் கிறது என்று தெரிகிறது. சரி 'வா' போகலாம்.

ஆ: எங்கே!

பா: கம்பெனிக்கு!

ஆ: வேண்டாம்.

பா: ஏன்?

ஆ: நானங்கு வர விரும்பவில்லை.

பா: நீ விரும்பவில்லை யென்பதற்காக உன்னை விட்டுவிடவா போகிறேன். ஆனந்தா இதுமாதிரி வேதனை களெல்லாம் இளம் வயதிலே சர்வ சாதாரணம். இதற்காக மனதைப் போட்டுக் குழப்பிக்கொள்ளலாமா வா கம்பெனிக்குப் போவோம். அமைதியான தனியிடம் இருக்கவே இருக்கிறது. அங்கே தங்கிக்கொள். உன் அல்லலெல்லாம் பறந்து போய்விடும்.

ஆ: போதும் உன் அனுபவ சித்தாந்தமும் அதைப் போக்க நீ சொல்லும் உபதேச முறைகளும். நான் எங்கும் வரவில்லை.

பா: சரி உன் விருப்பப்படி எங்கே போகப் போகிருய் அதையாவது சொல்.

ஆ: அதை நான் யாருக்கும் சொல்லிக் கொள்ள விரும்பவில்லை.

பா: சொல்லிக் கொள்ளாமல்தானே வந்திருக்கிருய்.

ஆ: அதைத் தெரிந்துகொண்டிருக்கும் அதைக் காட்டிக்கொள்ளாமல் நடிப்பதையும் புரிந்துகொண்டுதான் பேசுகிறேன். என்னைத் தொந்தரவு செய்யாதே போய்விடு.

பா: இப்படியெல்லாம் கூறிவிட்டால் உன்னை விட்டுப் போய்விடுவேனென்று கருதுகிருய், ஒருபோதும் அவ்வாறுநடந்துகொள்ள மாட்டேன். உன்னை நடந்துகொள்ளவும் விட மாட்டேன்.

ஆ: புரிந்துகொண்டேன் உன் போக்கை நயவஞ்சகா! என்னை அடுத்துக் கெடுக்கவா திட்டம் திட்டுகிருய்! ஏனடா உனக்கிந்தப் பிழைப்பு! உன் சூதாட்டக் காயாக மாறுவதற்கு வேறு ஆளைப் பார். நான் தகுதியல்ல. பட்டணத்து வாசத்தில் படாடோபத்தின் மறைவில் இந்தச் செப்படிவித்தை செய்தா காலங்கழிக்கவேண்டும் போ-போ!

பா: (திகிலடைந்தவனய்) ஆனந்தா!



ஆ: என்ன! உண்மையைப் புரிந்துகொண்டானே என்று உடல் பதறுகிறதா? உண்மை என்றேனும் ஒரு நாள் வெளிப்படத்தான் போகிறது!

பா: ஆனந்தா! இத்தகைய விபரீத எண்ணத்துக்கு நீ ஆளாய்விடுவாய் என்று நான் கனவிலும் கருதவில்லை! போ உன் விருப்பம் எங்கேயோ அங்கேபோ! உன்மீதுள்ள பாசத்தால்உன் தந்தையின்பால் கொண்டுள்ள அன்பின் பெருக்கால் அவ்வாறு வலியுறுத்திக் கூறினேன் நீயோ வாழ்நாள் முழுவதுமே நான் கேட்கக்கூடாத சொற்களால் என்னைக் கொல்லாமல் கொன்றுவிட்டாய்! உன்னைத் தடுத்ததற்கும் என்னுடன் இருக்க அழைத்ததற்கும் என்னை மன்னித்துவிடு. இனி ஒரு போதும் அத்தகைய தவறை உன் வரையில் நான் செய்யமாட்டேன்!

ஆ: நண்பனே! உன்னை நான் அறியாதவனு? என்னை மன்னித்துவிடு. வெறுப்புற்று வந்த நான் உன்னுடன் இருக்க விருப்புறுத்தான் வந்தேன். ஆனல் என்னைவிட என் தந்தை முந்திக்கொண்டார். உன்னை ரயில் நிலயத்தில் பார்த்ததுமே யாவும் புரிந்துகொண்டேன். இன்னும் உன்னுடனிருந்து உனக்கு இரண்டுங்கெட்ட நிலையை உண்டாக்கி இடர்ப்பாட்டை ஏற்படுத்துவானேன் என்றுதான் எங்காவது போய்விட எண்ணினேன். உன்பிடிவாதம் அதிகரிக்கவே இனியும் உன்னை மீறமுடியாதென்ற அளவில் உன் மனம் நோகப் பேசிவிட்டேன். வருந்தாதே! என்னை நீ அறியாதவனல்லவே..

பா: நல்லது ஆனந்தா! போ...

ஆ: என்மீது வெறுப்போ-கோபமோ! இல்லையே! என்னை மன்னித்துவிட்டாயல்லவா!

பா: பைத்தியக்காரா! நீ என்ன தவறு செய்துவிட்டாய் உன்னைநான் மன்னிக்க; உன் நண்பன் நான். மன்னிப்பிலும் பாதிபொறுப்பு உன்னிடம்தானே இருக்கிறது. போ! நீயாக எப்போது திரும்பி வந்தாலும் உன் பொருட்டு கதவு திறக்கப்பட்டே இருக்கும்...

ஆ: சென்று வருகிறேன்!

என்று விடைபெற்றுக்கொண்டு சென்று எங்கோ ஒரு கோடியில் - சென்னை மக்களே செல்ல அஞ்சும் ஒரு இடத்தில் காலியாக இருந்த வீட்டிற்குக் குடியாகச் சென்று சேர்ந்தான் ஆனந்தன். அங்குள்ள பலருக்குப் பல விதமாகக் காட்சியளித்தான், காசு நாடுவோர் அவனிடம் இருக்கும் காசின் அளவுக்கு ஆருடமிட்டனர்! எதையும் எதிர்பார்த்து வாழவேண்டிய நியதியுள்ளவர்கள் அவன் தங்கள் வரையில் எவ்வாறு பயன்படுவானென எண்ணமிட்டனர். பயனுள்ள எதுவும் செய்தறியாது பயமுறுத்தி வாழும் பக்காப் பேர்வழிகள் தங்கள் பங்குக்கு எந்தமுறை சாத்தியப்படுமெனக் கணக்கிட்டனர். இன்னும் சிலர் இங்குவந்து வலியக் குடியேறியிருக்கும் இவன் துணிவையும் போக்கையும் கொண்டு போலீஸ் சம்பந்தப் பட்டவனக இருக்குமோ என்ற திகிலுடன் உலவினர். இப்படிக்கண்டோர் கருத்துகளுக்குக் கணமொரு விதமாகக் காட்சியளித்து வழ்ந்துவந்தான்.

ஒருநாள் ஒரு இளம்பெண்.

இளம்: இந்த வீட்டில் யாரிருக்காங்க!

ஆ: என் இருக்கிறவங்களைப் பார்த்தா வீட்டில் இருக்கிறவங்களாத் தெரியலியோ!

இளம்: அதுக்கில்லீங்க! பெண்கள் இருக்கிற வீடா இருந்தா...பால் வாங்குவாங்களான்னு கேட்கலாம்னுதான்......

ஆ: ஓஹோ! பால் வியாபாரமா!

இள: ஆமா! வேணுங்களா?

ஆ: ஊத்திட்டுப்போ......

இள: எவ்வளவு......

ஆ: எவ்வளவா...

இள: ஆழாக்கா...உழக்கா?

ஆ: ஏதாவது ஊத்து......

இள: உழக்கு ஊத்திருக்கிறேனுங்க......

அன்றுமுதல் வாடிக்கையாகப் பாலூற்றிக் கொண்டு வந்தாள். நாட்கள் செல்லச் செல்ல வேடிக்கையும் விநோதமும் பேசிக்கொள்ளும் அளவுக்கு ஒருவருள்ளத்தில் ஒருவர் குடிபுகுந்துவிட்டனர். ஒரு சமயம் ஆனந்தன் கையில் கொண்டு வந்திருந்த பணமெல்லாம் தீர்ந்துவிட்டது. சிகரெட் பிடிக்கும் பழக்கம் உடையவனுதலால் பழக்கங்களிலுள்ள கடையில் கடன்வைக்கும் நிலைமை வந்துவிட்டது. அதையும் வாங்கித்தருபவள் அந்த இளம் பெண் மீனுதான்.

அன்று கடைக்காரன் சிகரெட்டுத்தர மறுக்கவே அவனுடன் வாதாடிக்கொண்டிருந்த மீனுவின் வாய்ச்சொல் முறைகளைக் கேட்டு அங்கிருந்த பாலு சிகரெட்டுக்கு பணம்தான்

கொடுப்பதாக கூறினன். அதன்பிறகு கடைக் காரன் இணங்கியபோதிலும் மீனு மறுத்தாள். தன் கணக்கிலேயே வாங்கிச் சென்றுள். அவள் பேச்சில் குறிப்பிட்ட சொற்களைக் கொண்டு அவளைத் தொடர்ந்து சென்று அவள் யாருக்கு சிகரெட் வாங்கிச் சென்ருளென்பதைக் கண்டுகொண்டான். உடனே கடைக்கு வந்து வேண்டிய பணம் கொடுத்து அவள் வந்து எது கேட்பினும் கொடுக்க ஏற்பாடு செய்துவிட்டுப் போனுன். மறுநாளும் அவள் வரவை எதிர்பார்த்திருந்து நிறையத் துணிகள் வாங்கிவைத்துக் கொண்டிருந்தான். அதை அவளிடம் கொடுத்து ஆனந்தனுக்குக் கொடுக்கச் சொன்னபோதுதான் அவனுக்கும் ஆனந்தனுக்கும் உள்ள நட்பு அவளுக்குத் தெரிய வந்தது. முதல்நாள் அவனைப்பற்றித் தான் கொண்ட தவருன எண்ணத்திற்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டாள். பின்னர் அவன் விருப்பப்படியே அவனை ஆனந்தன் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்ருள். துணிகளை ஏந்திவரும் அவளைக்கண்டதும் "இதையெல்லாம் யார் வாங்கிக் கொடுத்தது" என்ற கேள்விக்குப் பதிலாக பாலுவே அவன் எதிரில் நின்ருன். நண்பா! நீதான் என் இடத்திற்கு வரமறுத்தாய். நான் வருவதற்கும் தடையுண்டோ" என்றபோது ஆனந்தனின் கண்கள் நாணத்தாலும் அன்பின பெருக்காலும் கண்ணீரைச் சொரிந்தன. அதன் பிறகு வீட்டிற்குச் சென்ற மீனுவைப்பற்றி விசாரித்த பின்னர் ஆனந்தனுக்காக அவனிடமிருந்த செய்திகளைக் கூறினன். ஆனந்தனது கடந்த ஓராண்டு கால வாழ்க்கைச் செய்திகளையும் கேட்டறிந்துகொண்டு அதுவரை அவன் தீட்டி வைத்திருந்த நெடுங்கதையொன்றை எடுத்துச் சென்று வெளியிட்டான். அந்தக் கதை அவ்வாண்டுக் கதை தேர்வில் முதற்பரிசைப் பெற்றது. அந்தப் பரிசுக்குப் பாராட்டு, அங்கயற்கண்ணியின் தந்தை நல்ல தம்பிப் பிள்ளையின் தலைமையில், அவரது பள்ளித் திடலில் நடைபெற்றது. பாராட்டு முடிந்ததும் வீட்டுக்கு விருந்துக்கு அழைத்தனர். மீனுவையும் உடனழைத்துக்கொண்டு சென்ருன். தனக்குக் கிடைத்திருக்கும் அந்தத் தருணத்தைப் பயன்படுத்தித் தன் காதலை வெளியிட்டாள் அங்கயற்கண்ணி. ஆனந்தன் அவள் சொற்களை மறுத்தாள். மீனு தன் காதலி என்று எடுத்துக்கூறி வெளியேறினன். வெளியில் வந்தபின்னர் மீனு தன் நிலைகளை விளக்கி, அங்கயற்கண்ணியை மணம் செய்துகொள்ளத் தூண்டினுள். அவனறியாமலேயே பாலுவின் முயற்சியினும் மீனுவின் துணையினுய திருமண ஏற்பாடுகள் நடைபெற்று வந்தது.

திருமணநாள். அன்று மாலை மீனு அங்கே வந்தாள், தம்பதிகளைக் கண்டு மகிழ்ந்தாள். அவர்களைத் தன் வீட்டிற்கு வரவேண்டுமென்று மன்ருடிக் கேட்டுக்கொண்டாள். அப்போதும் அவள் விருப்பத்தை மறுக்க ஆனந்தனுக்கு மனமில்லை. அவளைத் தடைசெய்வார் அங்கு எவருமில்லை. பொங்கும் உள்ளத்தை அடக்கிக்கொண்டு தன் வீட்டிற்கு எல்லோரையும் அழைத்து விருந்தூட்டி, அவர்களை வழியனுப்பி வணக்கம் செய்து விட்டுத் தன் பின்னுல் நின்ற தாயின்மீது சாய்ந்தாள். அப்போது அவள் பேசிய கடைசிப் பேச்சு "அம்மா நான் பிழைக்கமாட்டேன், விஷம் குடித்திருக்கிறேன் என்பதுதான்" அங்கே இரண்டு குரல் வானதிர ஒலித்தது. ஒன்று கண்ணே என்று பிள்ளைப் பாசத்தால் அலறிய அவள் தாயின் குரல்-மற்றொன்று திரும்பிப்பார்த்தபோது துவண்டு விழுந்து கொண்டிருப்பதைக் கண்டு மீனு என்று கதறிய ஆனந்தனின் குரல்; அடுத்துஅங்கே அழு குரல்.

தன் வாழ்நாள் முழுவதும் மீனுவை அவன் எப்படி மறப்பான். அவன் ஓவியனுனபடியால் தன் உள்ளத் திலே கோல் கொண்டு தீட்டப்படாமல் தூசியும் மாசும் படராமல் வண்ணத்தில் பழுது வந்து சேராமல் அமைத்துவைத்திருந்த அவள் உருவத்தை உயிர் ததும்ப ஓவியமாக்கி வைத்திருந்தான். அதையும் யாரோ எடுத்துச் சென்று பரிசுக்கு இலக்காக்கினராம். பெரும் பரிசு பெற்றதாம் இந்த ஓவியம். அவன் எண்ணத்தில் இருந்து வந்த ஏக்கத்தைப் போக்க அந்தப் பரிசுகளின் விலை போதுமா? அவைகளால் அந்த எண்ணத்தை ஈடேற்றத்தான் இயலுமா? எதில் எத்தனை இன்பங் கண்டாலும் அதனில் ஒரு பங்கு அதிக இன்பங் கண்டான் அந்த உயிரோவியத்தில்.

அப்போது அவன் எண்ணத்தில் பளிச்சிட்டது ஒரு பாடல் முத்தொள்ளாயிரத்தில் "வேட்டுவன் பாதுகாத்த வெறுங் கூடு" என்ற வரியை நினைத்துத் தன் நிலைமையும் ஓவியத்தின் காட்சியையும் எண்ணிக் கொண்டு பெருமூச்செறிந்தான். அவனுக்கு அவன் உடல் உயிரற்ற ஒரு வெறுங் கூடாகவே உணர்வளித்தது.





# ஜனநாயகத்தில் எதிர்க்கட்சி!

தேர்தல் நேரத்தில் கிராமப் புறங்களில் இருக்கும் வாக்காளர்களைச் சந்திப்பதை ஒரு மகிழ்ச்சியான வாய்ப்பாக அண்ணு அவர்கள் பயன்படுத்தி வந்தார்கள். கிராமத்து மக்களும் அண்ணு அவர்களை ஆவலோடு வரவேற்று விளக்கம் பெறவும், சந்தேகங்களைக் கேட்டுத் தீர்த்துக் கொள்ளவுமாகப் பயன்படுத்தி வந்தார்கள். அண்ணு அவர்கள் கிராமத்து மக்களுக்குப் புரியும் விதத்தில் மிக எளிய உதாரணங்களுடன் அவர்களுக்கு விளக்கமளித்து வந்தார்கள். காஞ்சித் தொகுதியைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் அண்ணு அவர்களை நோக்கி "ஐயா, நீங்கள் ஒருசிலர்தானே வெற்றிபெற்று சட்டசபைக்குப் போகமுடியும், காங்கிரஸ்காரர்கள் பெருவாரியாக வந்து ஆட்சி அமைப்பார்கள்; அப்படியிருக்கும் போது நீங்கள் கொஞ்சம்பேர் போய் என்ன செய்ய முடியும்''? என்று ஒரு நண்பர் கேட்டார். அதற்கு அண்ணு அவர்கள் அந்த மக்களுக்கு ஜனநாயகம்பற்றி ஒரு விளக்கமளித்தார்கள். ஜனநாயக ஆட்சியில் எதிர்க்கட்சி என்பது மிக இன்றியமையாத ஒன்று என்று எடுத்துக்கூறி, ஆட்சியாளர்கள் தவறு செய்கிற நேரத்தில் இடித்துக் கூறவும் எடுத்துக்காட்டவும் எதிர்க்கட்சி தேவை என்பதை விளக்கினுர்கள். எதிர்க்கட்சி அளவில், தொகையில் குறைந்தவர்களைக் கொண்டிருந்தாலும் ஆளும் கட்சியைத் தடுத்து நிறுத்தவும் தட்டிக் கேட்கவும் வன்மை படைத்ததாக விளக்கும் என்று கூறி அதற்கு ஒரு உதாரணமும் தந்தார்கள். "ஒரு மொந்தை கூழ் குடிக்கிற தென்று வைத்துக்கொள்ளுங்கள். அந்த மொந்தை கூழும் குடிப்பதற்கு கையில் ஒரே ஒரு பச்சை மிளகாய் இருந்தால் போதும். ஒருதடவை மிளகாயைக் கடித்து அந்தக் காரம் அடக்க கொஞ்சம் கூழ் குடித்து, இப்படியே அந்த கூழ் முழுவதையும் குடித்துவிட முடியும்.

"அதைப்போல ஆளும் கட்சியை ஒரு மொந்தை கூழ் என்று வைத்துக்கொள்ளுங்கள். எதிர்க்கட்சியை ஒரு பச்சை மிளகாய் என்று வைத்துக்கொள்ளுங்கள். எனவே அளவுபற்றி கவலைப்படுவதைவிட வன்மைவயப் பற்றிதான் நாம் யோசிக்கவேண்டும் என்ருர்.

இந்த அழகிய சிறிய உதாரணத்தின் மூலம் அந்தக் கிராமத்து மக்கள் ஜனநாயகத்தில் எதிர்க்கட்சியின் அவசியத்தை உணர்ந்துகொண்டு, "நாலுபேர் சென்ருல் என்ன செய்ய முடியும்'' என்று கேட்கின்ற கேள்விக்கு நல்ல விளக்கமும் பெற்ருர்கள்.

பதிவு எண்: M 6296 மன்றம் தொலைபேசி எண்: 55697

## வெளிவந்துவிட்டது!




ஆசிரியர்:
இரா. செழியன், எம். ஏ.,

மூன்று சிறு நாடகங்களின் தொகுப்பு

## “போராட்டம்”

விலை ரூ. 2-4-0

கிடைக்குமிடம்;

**பாரி நிலையம்**

59, பிராட்வே :: சென்னை - 1.

---

தமிழ்நாட்டில் தலைசிறந்த

# வெண்சங்கு சீயக்காய்தூள்

**எங்கும் கிடைக்கும்**

எங்களிடம் தயாராகும் மணத்தில் சிறந்த

**செல்வம் — ராணி ஊதுபத்திகளை**

வாங்கி உபயோகியுங்கள்




தயாரிப்பாளர் :- வெண்சங்கு சீயக்காய்தூள் தொழிற்சாலை

**3037-38, டபீர் குளம் ரோடு, தஞ்சாவூர்.**

“மன்றம்” அச்சகத்தில் (26, கைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1)
ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.

